ளிய கைலாசவாசகராகிய பரமசிவனை வணங்கும்படியான செல்வத்தை யுடையவரே யென்று சொல்ல அந்த நந்திகேசுரர் சொல்லத் தொடங்கி னார் -எ-று. (௨)

பஞ்சபாதகமொருவனப்பதியிலே பண்ண
நெஞ்சினனினைந்திடினு நினைத்ததே பரமாய்த
தஞ்சமாகிய முத்தியாமெனமறைசாற்று
மஞ்சொலாலதுமொழிந்தபேர்க்கென்னபேறரிதே.

(இ-ள்.) ஒருவன் அந்த அருணாசலஸ்தலத்திலே பஞ்சபாதகங்களைச்செய்யவேண்டுமென்றுநினைத்தாலும் அப்படிநினைத்ததே மேற்பட்டபுண்ணியமாகி அதனால்பற்றுகோடாகிய முத்தியுண்டாகுமென்று வேதங்கள்முறையிடும் அன்பையுண்டாக்கும் நல்லசொற்களினாலேஸ்தோத்திரஞ்செய்பவர்களுக்கு என்னபேறுகிடைக்கமாட்டாது என்றவாறு. (௩)

ஆகையாலுமக்கன்றியெமக்குமுண்டதிகஞ்
சோகமேகங்கடவிர்ப்பவனொருபராஞ்சுடராய்
மாகமூடுறவளர்ந்ததுமாலயாகராகப்
போகலிங்கமொன்றானதுமொருவகைபுகல்வேன்.

(இ-ள்.) ஆனபடியினாலேமார்க்கண்டேயரே இந்தமகான்மியத்தைக்கேட்கிறஉமக்கேயல்லாமல்எனக்கும் அதிகபலனுண்டாகும் துக்கத்தையும் மோகத்தையும் நீக்கிவிடுகிற சிவன் ஒப்பற்ற பெரியசோதிசொரூபமாய்ப் பிரமாவிஷ்ணு இவர்களுக்காக ஆகாசமளாவிவளர்ந்தும் சர்வத்திரர்க்கும் போகத்தைக்கொடுக்காநின்ற லிங்கமென்றுசொல்லும்படி திருவுருக்கொண்டதும் எனக்குத்தெரிந்தஅளவில் கொஞ்சம் சொல்லுகிறேன்-எ-று. (௪)

ஒடுங்குநாளினிலயனரியுருத்திரன்மகேச
னொடுஞ்சதாசிவன்விந்துநாதஞ்சத்தியொடியே
யடங்கிடும்பராசிவந்தனிற்பரமசிவமனைத்துங்
கடந்ததத்துவ முடிவிலேநின்றதுகருதி.

(இ-ள்.) சர்வசம்மாரகாலத்தில் முறைப்படிச் சகலஉயிர்களும் பிரமாவிடத்திலொடுங்கிப் பிரமாவிஷ்ணுவிடத்திலொடுங்குவார் விஷ்ணுமகேசுரனிடத்திலொடுங்குவார் மகேசுரன்சதாசிவனிடத்திலொடுங்குவார் சதாசிவம் விந்துவினிடத்திலொடுங்குவார் விந்துநாதத்தினிடத்திலொடுங்கும் நாதம் சத்தியினிடத்திலொடுங்கும் சத்திபரமசிவத்திலொடுங்கும் அந்தபரமசிவம் திருவுளங்கொண்டு எல்லாங்கடந்த தத்துவமுடிவிலேநின்றது-எ-று. (௫)

பரசிவத்தினில்வருபராசத்தியாற்குடிலை
விரிவிடபா தத்துவமனைத்திலேவிரிந்து

மருவுமைவரு மொடுங்கியமுறையிலேவங்கா
ரரிமகன்படைத்திடுவதுநினைந்தனனகத்தில்.

(இ-ள்.) அப்படியெல்லாம் ஒடுங்கினகாலத்தில் தனியாகிநின்ற பரமசிவம் உலகம்உண்டாக்கவேணுமென்று திருவுளங்கொண்ட அளவில் அந்தசிவனிடத்திலே தோன்றிய பராசத்தியினிடத்தில் குடிலையென்னும்சத்திதோன்றியது அதில்பெருமைபொருந்திய மகேசத்துவங்கள் முறையே உண்டானதுகள் பஞ்சகிருத்தியங்களுக்குரிய பிரமா விஷ்ணு ருத்திரன் மகேசுரன் சதாசிவன் முன்னே ஒடுங்கிய முறையே உண்டானார்கள் விஷ்ணுவினுடைய புத்திரனாகிய பிரமா அவ்வுலகத்தைசிருஷ்டிக்கிறதற்கு மனதில்எண்ணினார்-எ-று. ()

மரீசியங்கிரன் புலத்தியன்புலகனுள் மறையோர்
கிருதுவத்திரிசனபதி யெழுவருநினைத்தா
ருரியதக்கனும வலப்பதப்பெருவிரலுதித்தான்
பிருகுமார்பினு மறத்திறைமுகத்தினும்பிறந்தார்.

(இ-ள்.) அப்படிபிரமா நினைத்தவுடனே மரீசி-அங்கிரன்-புலஸ்தியர்-புலகர்-கிருது-அத்திரி-சனபதியென்கிற ஏழுரிஷிகளும் பிறந்தார்கள் தக்கன் வலதுகால்பெருவிரலில்பிறந்தான் பிருகுமார்பினிடத்திற்பிறந்தான் தருமதேவதைமுகத்திற்பிறந்தது-எ-று. (எ)

உன்னுமைந்தரின் மரீசிபாற்காசிபனுதித்தான்
பன்னுதக்கனு மைம்பதுபெண்களைப்பயந்தா
னன்னகாசிப னவர்பதின்மூவரையணைந்தான்
முன்னளாகியவதிதிபாலிமையவர்முளைத்தார்.

(இ-ள்.) பிரமாவினிடத்திற்பிறந்த பிள்ளைகளாகிய எழுவரில் மரீசிரிஷியினிடத்தில் காசிபரிஷிபிறந்தார் தக்கனென்பவன் ஐம்பது பெண்களைப்பெற்றான் அந்தஐம்பதுபெண்களில் பதின்மூன்றுபெண்களைக் காசிபர்விவாகஞ்செய்தார் மூத்தவளாகிய அதிதிவயிற்றில முப்பத்துமுக்கோடி தேவர்களும்பிறந்தார்கள்-எ-று. (அ)

இருமைசேர்ந்திதி யிரணியனிரணியாக்கர்களைத்
தெரியவீன்றனள் சிறப்புறுந்திதியெனுமிளையாள்
தருணமைந்தரி ரணியன்பிரகலாதனனோ
டருமைமைந்தர்களவரைப்பயந்தனனவருள்.

(இ-ள்.) அதன்பின்பு அதிதிக்கு இளையவளாகிய சிறப்புப்பொருந்திய திதியென்பவள் இரணியன் இரணியாட்சசனென்கிற இரண்டுபேரையும் பிரசவித்தாகப்பெற்றாள் இந்தஇருவரில் இரணியன் பிரகலாதன்முதல் ஐந்துபிள்ளைகளைப்பெற்றான்-எ-று.

பிரகலாதனன் றவத்தினுல்மூவரைப்பெற்றா
னருணமைந்தரில் விரோசனன்மாவலியளித்தான்
மாவுமாவலி வாணனென்றெருவனைப்பயந்தா
னானருச்சனைபுரிந்தவ னயன்றொழவிருந்தான்.

(இ-ள்.) அந்தப்பிரகலாதனன் தவத்தினுலே மூன்றுபிள்ளைக ளைப்பெற்றான் அந்தமூவரில் விரோசனனென்பவன் மாவலியென்பவ னைப்பெற்றான் மாவலிவாணாசூரனைப்பெற்றான் அந்தவாணாசூரன்பா மசிவனைப்பூசித்துப் பிரமாதொழுபடியாக வாழ்வு பெற்றிருந்தான்-என்றவாறு. (௰)

தனுவளித்தவன் சம்பரன்முதலினோர்பதன்ம
ரனையதானவர்ப் பெற்றனன்சிங்கிகையணங்கு
பணியிராகுவே முதலொருநால்வரைப்பயந்தாள்
பினையளாநகொரு மூன்றுபேரசுரரைப்பெற்றாள்.

(இ-ள்) மலைகளினுடைய சிறகையறுக்கிறதற்குத் தேவேந்திர னுக்குத கண்முதுகெலும்பைக்கொடுத்துத தேகத்தைவிட்டவராகிய ததிசிரிஷியெனபவர் சமபரன்முதலாகிய பத்து அசுரர்களைப்பெற்றா அந்தப் பத்துப்பேரில் சிங்கிகையென்பவள் இராகுமுதல் நாலுபிள் ளைகளைப்பெற்றாள் அவளுக்கு இளையவள் மூனறுபேர்அசுரரைப்பெ ற்றாள்-எ-று. (௰௧)

காலசேயர்களறுவரைப் பயந்தனள்காலை
காலநீள்சிறைக் கருடனுமருணனுந்தவிர
நாலுபாலரைப புதல்வராவினதையுநயந்தாள்
ஆலநேர்விழிக்கத்துரு பணியெலாமளித்தாள்.

(இ-ள்.) காலையென்பவள் காலகேயர்கள் ஆறுபேரையும்பெற்றா ள் மிகவும்நீண்டிருக்கிற சிறகினையுடையகருடன் அருணனோடு கூட நாலுபிள்ளைகளை வினதையென்பவள்பெற்றாள் விஷத்தையொத்த க ண்களையுடைய கத்துருவென்பவள் பாம்புகளெல்லாவற்றையும் பெ ற்றாள்-எ-று. (௰௨)

அரிட்டையென்பவளிடத்திலேயரம்பையேமுதலாய்த
திரட்டிமங்கையர் பிறந்தனரிலங்கிளைமுனிவ
னருட்டலத்திலென் னிரட்டிகந்தருவரையளித்தா
ளருட்டுவாள்விழிக் கபிலையாற்பதின்மர்வந்துதித்தார்.

(இ-ள்.) அரிட்டையென்பவளிடத்தில் அரம்பை ஊர்வசிமுதலா ன பெண்கள்பிறந்தார்கள் இலங்கிளையென்பவள் முனியினுடைய இரு ளையினுலேபதினாறுவகையாகியகந்தருவர்களைப்பெற்றாள் வாள்போன் ற கண்களையுடையகபிலையிடத்தில்பத்துப்பிள்ளைகள் பிறந்தார்கள்-எ-று

அங்கிரர்சனபதிகள் கார்கருவரையளித்தார்
தங்குமத்திரி கதிரமதிபுலத்தியன்புனையா
பொலகிராக்கதர் வானரர்கின்னராபுலக
னகுமைந்தர்கிம் புருடர்பின்விலங்கையுமளித்தான்.

(இ-ள்.) அங்கிரா-சனபதியென்கிற இருவரும் கார்தருவரைப்பெற்றார்கள் அத்திரியென்பவர் சூரியசந்திரரிருவரையும்பெற்றார் புலத்தியா-இராட்சதர்-வானரர்- கின்னரர்-இவர்களைப்பெற்றார் புலகரிஷியென்பவர்கிம்புருடரையும் மிருகங்களையும்பெற்றார்-எ-று. (௰௪)

தருணராகியவசுக்களைச் சனபதிதந்தான்
பிருகுவென்பவன் கவியுடன்சவுனகரைப்பெற்று
மிருவரோடுசெந் திருவையும்பிருகுபெற்றெடுத்தான்
பருவமைந்தரிற் கவியுமோவெள்ளியைப்பயந்தான்.

(இ-ள்.) சனபதியென்பவர்பின்னும் தருணம்பொருந்தியஅஷ்டவசுக்களைப்பெற்றார் பிருகுவென்பவர் கவியென்பவனையும்சவுனகரையும்பெற்றார் இந்தஇருவரைப்பெற்றதுமல்லாமல் பின்பு லட்சுமியையும்பெற்றார் அந்தப்பருவம்பொருந்திய பிள்ளைகளில் கவியென்பவர் சுக்கிரனைப்பெற்றார்-எ-று. (௰௫)

பரியதானதன் றேவிமூக்கிரண்டினும்பரிதி
யுரியவாண்பரி யாகிப்பெட்டிரியதையூற
வரிசைபெற்றிய மருத்துவரிருவரும்வந்தார்
விரி * சராசரம் பிறந்தனபலபலவிதமாய்.

(இ-ள்.) சூரியன் தன்மனைவியைச்சேருகிறதற்கு யத்தனப்பட்டபோது அவள் தனக்குப்பொருந்தாமல் பெண்குதிரையாயோடினாள் சூரியன் ஆண்குதிரையாயத்துரத்தி அவளைத்திருப்பிப்பார்த்தான் அப்போது சூரியன்தனதுபெண்சாதியினிரண்டுமூக்கிலும் இந்திரியம்நுழைந்தூற வரிசையாகிய அசுவினிதேவர்களிருவர்பிறந்தார்கள் அதன்பின்பு சரமும் அசரமும் அனேகவிதமாயுண்டாயின-எ-று. (௰௬)

கலிவிருத்தம்.

கண்டுலகெலாநமது கற்பனைகளென்றே
புண்டரிகவேதியன் மதத்திரிபுரத்தில்
தண்டியெதிர்கொண்டுபகை தங்கவிசைவண்டார்
வண்டுளபமாயனை வைதுரைவழங்கும்.

(இ-ள்.) இப்படிச்சகலமும் உண்டாக்கிய பிரமதேவர் இந்த உலகெல்லாம்நம்முடையசிருஷ்டியினாலல்லவோ உண்டாயினவென்று அகங்காரங்கொண்டு அதனால்வைகுந்தத்தில் வலுவிற்போயெதிர்த்துப் பகைகொள்ளும்படி சங்கீதம்பாடாநின்றவண்டுகள்சூழ்ந்த துளபமாலையைத்தரித்த விஷ்ணுவைப்பார்த்து அவமதித்துச் சிலவார்த்தைகள் சொல்லத்தொடங்கினார்-எ-று. (௰௭)

* சரம்-நடையுள்ளன. அசரம்-நடையில்லன.

ஏழுலகமேழுபில மேழுபுயலோரே
ழாழிமுதலேழுகிரி யேழபகையியற்றி
வாழுமுயிரய வகையுமவகுத்திடமனதார்
பாழிமைமரீசிமுதல் மைந்தர்கள்படைத்தே.

(இ-ள்.) வாராயவிஷ்ணுவே பதினாலுலகங்களையுங்கருத்தமேகங்களையுமசத்தசமுத்திரங்களையும், முதன்மையாகிய சத்தகுலபருவதங்களையும் உண்டாகுமாபடிமனத்தினால்படைத்து எப்பொழுதும்வாழ்கின்ற எல்லாவுயிர்களையும உண்டாக்கவலிமைபொருந்திய மரீசிமுதல் சிஷிகளைப்பெற்றேன்-எ-று. (௰௮)

மைந்தர்துமைந்தர்கள் குருக்களுடன்வானோர்
சந்திரன்முதற்பெரிய தானவர்களானோர்
கந்தருவகிம்புருடர் சித்தர்கணநாத
ரிந்திரன்முதற்றிசைக ளெட்டினுமிருப்போர்.

(இ-ள்.) வாராய்விஷ்ணுவே என்னுடையபிள்ளைகளுடைய பிள்ளைகள் குருவாகிய பிரகஸ்பதியுடனே எல்லாதேவர்களும, சந்திரசூரியர்களும், அசுரர்களும்,கந்தருவ-கிம்புருடர்-சித்தர்- கணநாதர்களும் தேவேந்திரன்முதலாகிய திககுப்பாலகர் எட்டுப்பேருமாயிருக்கிறார்கள் இவர்களெல்லோரும் என்னாலல்லவோ உண்டானார்களென்று பின்னுஞ்சொல்லுவார் பிரமதேவர்-எ-று. (௰௯)

எஞ்சுதலிலாவிறைவ னென்பதனையென்பேர்
கஞ்சனானுமைந்தனை மறந்திடுகரத்தா
லஞ்சலில்படைபபொழியி லெப்படியளிப்பாய்
செஞ்சுவரிலாதெழுது சித்திரமுமுண்டோ.

(இ-ள்.) குறைவில்லாதசகலத்துக்கும் நானேகர்த்தனென்பதையும்,என பிள்ளைதான்பிரமாவென்பதையும், மறந்துவிடு நன்கையினாலேஉலகத்தைபபடைக்காவிட்டால்நீஎப்படிக்காப்பாற்றுவாய் சுவரிலலாமலெழுதுகிறசித்திரமுமுண்டோவென்று பின்னுஞ்சொல்லுவார் பிரமதேவர் -எ-று (உ௰)

அளித்திடுகளிப்பினை யகத்தினில்விடாயேல்
வெளிப்படவொருத்தனை யளித்திடவிதிப்பேன்
குளிர்ச்சியகடற்கிடை குதித்திடதனுள்ளே
யொளித்திடுசாதிரானுனைச்சருவுமுன்னே.

(இ-ள்.)வாராய்விஷ்ணுவேசகலத்தையும்இரட்சிக்கிறேமென்கிறமதத்தைவிட்டுவிடுகிவிடாமற்போனால்உனதுதியோகத்தைநீக்கி மற்றொருத்தனையுண்டாக்கிஇரட்சிக்குமதொழிலுககுவியமித்துப்போடுவேனெபமுடையபுத்திரபௌத்திரர்களாகிய தேவர்கூட்டங்கள்வந்து உன்னைக்கொல்லும்படிவளைத்துககொள்ளுகிறதற்குமுன்னே திருப்பாற்கடலுக்குள்ளேஒளித்துப்போவென்றுசொன்னார்பிரமதேவர்-எ-று

வித்தகமுனிப்பிருகு விட்டமுனிவாலே
பத்துருவெடுத்ததனை பகுத்தறிகிலாயோ
வத்தனையுடற்களு மமைத்தபடியாலென்
கைத்தலமுமிப்படி கறுத்ததாடிபாராய்,

(இ-ள்.) ஞானசொரூபியாகிய பிருகுரிஷி யானவரிட்ட சாபத்தினாலேபத்துதரம்பூமியிலேபிறந்தாய்நீ அதைப்பகுத்தறிய வில்லையோ அப்படிப்பிறந்தபோதெல்லாம் அவ்வளவு பெரியஉனது உடல்களையெல்லாம்படைத்துப்படைத்து என்கைகள்காய்ப்பேறினபடிகறுத்துப்போயினபாரென்றுபின்னுஞ்சொல்லுவார்—எ-று, ௨௨

உந்திமலரோனென விகழ்ச்சியுரையாதே
முந்தவொருதூணிடை முளைத்தனையுனக்கு
தந்தையெனவோவலது தாயெனவோசொல்
செந்தழல்பிரந்துகளை தீயப்பதறியாயோ

(இ-ள்.) வாய்விஷ்ணுவே நம்முடைய நாபிக்கமலத்திலே தானே வந்தனென்றுநிந்தனைசொல்லாதே முன்னாலே நீஒருதூணினிடத்திலேபிறந்தாயே அந்தத்தூணை உனக்குத்தகப்பனென்றுசொல்லட்டுமா அல்லதுதாயென்றுசொல்லட்டுமா அந்தத்தூண் உனக்குத்தந்தையானால்எனக்குநீதந்தையாவாய் செந்நிறம் பொருந்திய நெருப்புமூங்கிலினிடத்திலேபிறந்து மூங்கிலைத்தானே கொளுத்திப்போடுகிறதை யறியாயோ அப்படிஉன்னிடத்திலே நான்பிறந்தாலும்உன்னையழித்துப்போடுகிறேனென்றார்பிரமதேவர்—எ-று, ௨௩

வேதனிவைசொற்றன கொடும்படைவெதுப்பிக்
காதிடை துளைத்தனல்பு கட்டினகடுப்பக்
கோதமொடெழுந்தபுகை கொண்டநகைகொண்டே
மாதவன்மதித்தனன் மறுத்திவையுரைப்பான்

(இ-ள்.) பிரமாஇப்படி சொன்னவார்த்தைகள் விஷ்ணுவுக்கு இரண்டுகாதிலும் வேலாயுதத்தைப் பழுக்கக்காய்ச்சித் துளைக்கவிட்டுஉள்ளேசெலுத்தியநெருப்புப்போலத்திக்கமிருந்த கோபங்கொண்டுபுகையெழும்புப்படியாகநகைத்து இவனுக்குஇந்த அகங்காரம்வந்தது எந்தவிதத்தினாலேயென்று ஆலோசித்துச்சிலவார்த்தைகளைச்சொன்னார்விஷ்ணு—எ-று, ௨௪

வந்தவழிதன்னையு நினைந்திலைமனத்தென்
னுந்தியுனதன்னை யெனாஉன்னுதலையில்லாய்
தந்தைசிறுமைசெய்தபிழை தன்னையுணராரென்
றிந்தவுரைசொல்லினை யிகழ்ந்ததுபோறேனே

(இ-ள்.) வாராய்பிரமாவே நீவந்தவழியையும் நினைத்தாயில்லைஎன்னுடையநாபியைத்தாயென்று ஆலோசிக்கவும் இல்லை தந்தைகளாயிருக்கிறவர்களைபிள்ளைகள்செய்தபிழையை ஒருகுற்றமாகநினையார்களென்றுசொல்லார்களதைசொல்லினையோ இனிமேல இப்படிபொறுக்கமாட்டேன் என்றுபின்னுஞ்சொல்லுவார்.

கன்றுமதுவுக்கயிட வப்பகடுதானு
மென்றனையாரகவு மிகழ்ந்ததுயிர்குடித்தேன்
மன்றவொருதீமைசெயின்மைந்தனெனவுண்டோ
வன்றியுடனேயையுமறுத்தெறிகிலாரோ

(இ-ள்.)கோபத்தையுடையமதுவும் யானைபோன்றகைடவனும்ன னக்குப்பிள்ளைகளல்லவாஎன்னையிகழ்ந்துஎதிர்தத படியினாலேகொன் றுவிட்டேன்கிலெபெற்றஒரு தீங்குசெய்தால் மகனென்று பார்க்கக்கூடு மோஅதுவல்லாமல்தேகத்திலே ஒருகட்டிகண்டால் அதைஅறுத்தெறிந்துசொஸ்தபடுத்திக்கொள்ளாமலிருக்கிறார்களோமனுஷர்கள்.( ௬)

பித்தனுனதோர்தலைபிடுங்கியெறிபோதி
லத்தலைகமகனென வமைக்கவிதியில்லா
னத்தலைவனென்பதுனை யித்தகைமைகொண்டோ
பைத்தலையராமுடிகொள் பாரிடம்விதித்தாய்,

(இ-ள்.)வாராய் பிரமாவே பயித்தியக்காரனாகிய சிவன்உன்னுடைய தலைகளிலொன்றைப்பிடுங்கி எறிந்தகாலத்தில் அந்தத்தலையை மறுபடியுண்டாக்கிக்கொள்ள வகையில்லை உன்னைப்படித்தலைவனென்றுசொல்லுகிறது இந்தத்தலையைக்கொண்டுதானே படத்தையுடைய ஆதிசேடன் முடியிலிருக்கிறபூமியைப்படைத்தாயென்றார்விஷ்ணு

மச்சவுருவங்கொடு மறைதொகுதிதந்தேன்
விச்சைபுள தானவரை வென்றுயிர்குடித்தே
னச்சமரமாமெனினும் வைத்தமரமென்றே
யச்சமுறுகின்றன னழிக்கவறிதன்றே,

(இ-ள.)வாராய்பிர்மாவே சோமகாசுரன் உன்னிடத்தில்வேதங்களைப் பிடுங்கிக்கொண்டுபோனபோது நான்மச்சாவதாரங்கொண்டு அந்த அசுரனைக்கொன்று வேதங்களைவாங்கித்தந்தேன் அதுவல்லாமல சாமார்த்தியமுள்ள அநேக அசுரர்களைக்கொன்றுதேவர்களோடு உன்னையுங்காப்பாற்றினேன் எட்டிமரமானாலும் தான்வைத்தமரமாகவிருந்தால்வெட்டார்கள் அப்படிப்போல் பிள்ளையான உன்னைக்கொல்லக்கூடாதென்றுபயப்படுகிறேனென்றார்விஷ்ணு—எ-று, (௨௮)

என்றொருவருக்கொருவ ரெத்தனையுரைத்தார்
கன்றினர்புயத்தின்மிசை கைத்தலமடித்தார்
நின்றுலகுதித்தனர் நெருக்கினர்நிமிர்ந்தார்
துன்றியகனற்பொறிசுருக்கெழவிழித்தார்

(இ-ள்.)இந்தப்பிரகாரம் ஒருவருக்கொருவர் எத்தனைவார்த்தைகளையோ சொல்லிக்கொண்டிருந்தார்கள் கோபித்துக்கொண்டுபுஜத்தின்மேல் கைகளாலே அடித்துக்கொண்டார்கள் நின்று பூலோகத்தில் குதித்தார்கள் நெருங்கினார்கள் நிமிர்ந்தார்கள் நெருப்புப்பொறிசுருக்கமாய்விழச்சுறுகசெங்கண்களைவிழித்தார்கள்—எ-று, ௨௯

முந்தியவனுற்றதுயர் யாவையுமொழிந்து
வந்தவரவேதெனவருத்துரைசெய்கின்றார்.

(இ-ள்) சருவசங்காரகாலம்வந்ததென்று சொல்லும்படி இருவருஞ்சண்டைசெய்யும்போது அந்தவேளையில்தேவர்களெல்லாம் பயப்பட்டுத் தேவேந்திரனிடத்திற்போய்ச்சேர்ந்து தங்களுடைய துக்கத்தைச்சொல்லுகிறதற்குமுன்னேதேவேந்திரன் தான்பட்ட துன்பங்களெல்லாஞ்சொல்லிப்பின்பு நீங்கள்வந்தகாரியம் ஏதென்றுகேட்கத் தேவர்கள்சொல்லுவார்கள்—எ-று. (௩௪)

ஆரணனுநாரணனு மானவிருவோருந்
தாரணியிலேமிகு சமர்தொழில்விளைத்தா
ரோணிடவேறுகதி யில்லையெவருக்கும்
காரணனையேதொழுதல் காரியமிதென்றார்.

(இ-ள்) பிரம்மா விஷ்ணுவுமாகிய இருவரும் பூமியில்மிகுந்தயுத்தத்தைச்செய்கிறார்கள் எங்களுக்குப் பிழைக்கத்தக்கதாகக்கமவேறேயில்லை எல்லாருக்குங் காரணமாயிருக்கிற பரமசிவனைத்தொழுது இந்தச்செய்தியைச்சொல்வதேகாரியமென்றுசொன்னார்கள்தேவர்கள்

நாயகனிசைந்துபினர் நாகவுலகத்தோர்
தூயமலர்போலடி துதித்தரிவையாகா
மாயமுடன்மாலயன் வருந்தமதுதீராய்
தாயலதுமைந்தர்துணை தாரணியிலுண்டோ.

(இ-ள்) இப்படிச்சொல்லத்தேவேந்திரனும் சம்மதித்துப்பின்பு அவனோடு தேவர்களெல்லோருமே போய்ச் சிவனுடைய பரிசுத்தமாகிய தாமரைமலர்போன்ற பாதத்தைத்தொழுது மனைகையாகனே ஞானமுங்கொண்டு விஷ்ணுவும் பிரமாவும் சண்டைசெய்வதனால் வருந்துகிறதைத்தீர்க்கவேண்டும் பிள்ளைகளுக்குத்தாயேதுணையல்லாமல் மற்றொருதுணை பூமியிலுண்டோவென்று சொன்னார்கள்தேவர்கள்-எ(

உருப்படுசகட்டைநிக ருற்றுலகின்மீதே
யிருட்படுபிறப்பினை யிறப்பினையுறாதே
பொருட்பெறவுனக்கடிமை புககளவிலாவுன்
னருட்கடல்குளித்திட வடைக்கலமதானோம்.

(இ-ள்) உருண்டுகொண்டுபோகாநின்றவண்டியினுடையசக்கரம்போல அஞ்ஞானம்பொருந்திய பிறப்பையுமிறப்பையு மாறிமாறி யடைந்து வருத்தத்தை யனுபவியாமல் மோட்சத்தைப்பெற உனக்கடிமையாகப்புகுந்து உன்னுடைய அளவில்லாத கிருபைக்கடலில் குளிக்க அடைக்கலமானோமென்றார்கள் தேவர்கள்—எ-று. (௩௭)

புழுக்குடையுடம்பை பொறுக்கமுடியாக
விழுக்குடையினிச்சைகெட விச்சையருள்வோனே

முழுக்கடலிடத்தின் முழுக்களுமேமாறு
வழுக்கமலமற்றிட வடைக்கலமதானோம்.

(இ-ள்) அநேகம்புழுக்கள் குடைந்துகொண்டிராநின்ற உடற்பாரத்தைத்தப்பொறுக்கமுடியாத இழுக்காகிய அஞ்ஞானங்கெடப்பிரியத்தினாலே கிருபைசெய்கின்றசுவாமியே பெரியசமுத்திரத்தினிடத்தில் தினம்முழுகினாலும் போகாதமூலமலமாகிய அழுக்கற்றுப்போக அடைக்கலமாயுமமைச்சேர்ந்தோமென்றார்கள் தேவர்கள்-எ-று. (ஙஅ)

எண்ணமினிவேறிலை யெமக்கருள்செய்யென்றே
கண்ணுதலைவிண்ணவர்கள் கற்றுமொழிபோதி
லண்ணலுமுணர்ந்தனனைத்துயிரினுள்ளே
யெண்ணையெனநிற்குமவ னிதறிகிலானோ.

(இ-ள்.) இனிமேல்வேறேஆலோசனையில்லை எங்களுக்குக் கிருபைசெய்யுமென்று சிவனைதேவர்கள்புகழ்ந்து ஸ்தோத்திரஞ்செய்யும்போதில் சுவாமியும் அவ்விருவருக்கும் வந்தசண்டையின்மூலத்தை யறிந்தார் எல்லாவுயிர்களிடத்திலும் எள்ளினிடத்து எண்ணெயைப்போல்நிற்கும் சுவாமி இது அறியமாட்டாரோ அறிவார்-எ-று. (ஙகூ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நடுக்கமுறுமுனிவரெலா மமரரெலாம்பயந்துவிர நாகமீது
படுக்கைபுரிதிருமாலும் பங்கயத்திருக்குமயனும் பகைமைதீர
வடுக்கிவிடும்புவனமெலா மடுக்கழியாதிருக்கமனத் தருள்வதாகி
தடுக்கரியதழலுருவத் தொருவரையாயிருவரையுந் தடுப்பதானான்.

(இ-ள்) நடுக்கமடைந்தமுனிவர்கள் தேவர்களெல்லாரும் பயத்தைநீங்கும்படி சர்ப்பசயனத்தில் நித்திரைசெய்கின்றவிஷ்ணுவும்தாமரைப்புஷ்பத்தில்வீற்றிருக்கின்றபிர்மாவும் ஒருவருக்கொருவர் பகைமைநீங்கவும் அடுக்கடுக்காயிருக்கும் அண்டங்களெல்லாம் அடுக்குக்குலையாமலிருக்கும் கிருபைசெய்வதற்காகத் தடுத்தற்கரிய அக்கினிசொரூபத்தோடுகூடிய ஒருமலையாகி இந்தயிருவரையுந் தடுக்கும்படி எழுந்தருளினார் பரமசிவம்-எ-று. (சய)

பாதலத்திற்பணிகளெல்லா விழுதாகவதன்கீழிற் பருவேரோடிப்
பூதலத்திலகிலைத்திமையோ ருலகெல்லாமலர்ந்துமலப் புண்டரீகன்
மீதலத்துமுகடுடைத்துக் கடாகவெளிகடந்துபெரு வெளிக்குமேலா
மாதலத்துக்கிதுவுமொரு கனன்மேருவடுத்ததென வளர்ந்தமாதோ.

(இ-ள்.) பாதாளலோகத்திலிருக்கிறபாம்புகளெல்லாம் அந்தமலைக்குச்சல்லிவேராகவும் அதன்கீழ்ப்பருத்தவேரோடி பூமியிற்பெரிதாய் கிளைத்துத் தேவலோகங்களெல்லாந்தாண்டிப் பிர்மலோகத்துமுகட்டையுடைத்து அண்டகடாகவெளியைக்கடந்து அதற்குஅப்பாலிருக்கிற பெரியவெளிக்கு மேலாயிருக்கிற இடத்துக்கும் அக்கினிசொரூபமாகிய மகாமேருஅடுத்ததென்றுசொல்லவளர்ந்தது-எ-று.(சக)

ஞ்செய்துகொண்டு சம்பாதமனுஷாகளுக்கு அரியவனாயப்படிப்பட்டவர்களுக்கு தூரமாகயிருக்கிறவனாத தாமுடைய கண்ணுகியபுஷ்பத்தோடு அழகியபுஷ்பங்களைத் தரிககானின்றவனைப்பலதாமும் வந்தனஞ்செய்து உள்ளமுருகிப்பாவிஞ விஷ்ணு—எ-று. (௬௮)

கலிவிருத்தம்.

இன்னதாமியண்செய விருக்கவிங்கிதன்
முன்னமேயழற்கிரி முடியைததேடவே
யன்னமாய்ப்பறந்தவ னரைக்கணத்திலே
மன்னுமோராயிரக் காதம்வாவினான்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் இந்தவிஷ்ணுவிருக்க இதற்குமுன்னே அக்கினிமலையின்முடியைததேட அன்னபபட்சியாகிப் பறந்தபிரமா அரைக்ஷணத்திலே ஆயிரககாதவழியாகத்தாண்டினா—எ-று. (௬௯)

கிறியேயண்ட கோளகையுங்கீழுற
வேறினாறுயிர மாண்டுமேவினு
ஞறுநூறுயிரக காதநோக்கினு
மீறிலாதிருந்ததவ் வெறியினாணமே.

(இ-ள்) அண்டகோளகையுங்கிழிப்பட கிழித்துப்பறந்து நாறுயிரம்வருஷந்தேடினார் அப்படிஅனேகநூறுயிரகக தந்தாண்டிப்போயப்பாாததலும்முதலபாாத்ததுபோலவேயிருந்தது அக்கினிாதாண்-எ-.)

சிறையெலாமுதிர்ந்தன விசையுந்தீர்ந்தன
நிறைவதமிக்கனு முயிாபுநீணடன
குறையெலாம்வளாநதிடந தனிமைகூர்தலான்
பறையினனிலையிலை மனதிலெண்ணினான்.

(இ-ள்.) அப்படிபிரமா அன்னமாய்ப்பறந்துபோகிறபோது சிறகெல்லாமுகிர்ந்துபோயின விசையுமடஙகி பகுறைவில்லாததுக்கமும்பெருமூச்சும்அதிகப்பட்டன மனககுறை வளாந்தொருவருமில்லாமல்தான் ஒருவனானபடியினாலே பிரமாசிலதை மனதிலெண்ணினார்—எ-று.

அரியமாலிதனடி யறிந்துமீளுமோ
தெரிவருதிடையிலே திரும்புமோவென
வரியதாகியதுய ருதலாடினு
னெரியுறுமெழுகுபோ விளகுஞ்சிந்தையான்.

(இ-ள்) அரியமகாவிஷ்ணு இந்தஅககினிமலையினுடைய அடியை அறிந்துதிரும்புவாறோ கொஞ்சதூரந்தேடி இனிமேல் தேடககூடாதென்றுதிரும்பிவருவாளு என்கிறதுக்கமாகிய ஊஞ்சலிலிருந்தாடினார், நெருப்பிலேயிட்டமெழுகுபோல இளகிய மனதையுடையவாகி பிரமதேவர்—எ-று. (௭௦)

மற்றிதுசிவனென மனதிலெண்ணிலே
னுற்றிதன்னையு முறவுகொண்டிலே
னிற்றைநாளவனாகருமிவ் விடாகருமூழ்கினேன்
சிற்றறிவுடைமையோ செய்ததீமையோ

இ-ள். இந்தமலையைச்சிவனென்று அறியாமற்போனேன் பகைத்துக்கொள்ளப்பட்ட விஷ்ணுவையாவது உறவுகொள்ளாமற்போனேன அன்றுமுதலின்றையவரைக்கும்வெகுக லமாய்த்துக்கசமுத்திரத்தில்மூழ்கினேன் என்னுடையசிறியபுத்தியினாலேயோ பூர்வகாலத்திலேநான் செய்தபாவத்தினாலேயோவென்று விசனத்தையடைந்தார் பிர்ம்மதேவர்—எ-று. (௩௩)

எயதினேன்முடியறிந் தேகிலேனெனும்
பொய்கலையுஞ்சகினும பொருந்தவேயுளா
செய்துணைபிறிகிலை யென்றுதேடபினன்
கைதையின்மடல்வாய்ப் பின்புகண்டனன்

(இ-ள் இவ்வளவுதூரந்தேடிவந்துமுடியையறியாமற்போனேன் ஆகிலுமினிமேற்போய் விஷ்ணுவினிடத்தில் பார்த்தேனென்று பொய்சொன்னாலுங்கூட ஒருத்தரையாகப்பார்த்தேனென்றுபொய்சாட்சிசொல்லுகிறதற்கு ஒருதுணையுமில்லையேயென்றுவிசனப்பட்டார் அந்தசமயத்தில்தாழம்பூமடலொன்றுமேலேயிருந்திறங்கப்பார்த்தார்பிரமா-எ-

இம்மடவெங்குற்று வருவதென்னுமுன்
னம்மடலணைந்ததங் கையெற்றனன்
செம்மறன்முடியிலவீழ் செம்மலர்க்கையான
மெடமைசேருபி ப்பதாய் விடுமினென்றதே

(இ-ள்.) இந்தத்தாழைமடலெங்கேயிருந்து வருகிறதென்று ஆலோசிக்குமுன்னே தாழம்பூபிரம்மாவுக்குச்சமீபத்தில்வர அதைக்கையினாலேபிடித்தான் அதுபரமசிவனுடையசிரசிலிருந்து தவறிவிழுந்தாழம்பூவானபடியினாலே மெய்மையானபெருமூச்சோடு என்னைச் சீக்கிரத்திலேவிட்டுவிடுவாயென்று சொல்லியது—எ-று. (௩௪)

ஏரணிகைதையே யிங்குநீவருங்
காரணமேதெனக் கமலன்கூறினன்
ஆரணனாரண னளவிடாமுத
ருரணிமுடியினுந் தவறிவீழ்ந்தனன்

(இ-ள்.) அந்தத்தாழம்பூசொல்லியதைக்கேட்டு அழகுபொருந்திய தாழம்பூவேஎங்கேயிருந்து வருகிறாயென்று பிர்மாகேட்கப்பிரமாவினாலும் விஷ்ணுவினாலும் அறியகூடாதபரமசிவனுடைய சிரசிலேயிருந்து தவறிவிழுந்தேனென்றுசொல்லியது—எ-று. (௩௬)

தார்ப்பொலிமுடியினுந் தவறிவீழ்தபின்
ளுற்பதினாயிரம வருடமண்ணினே

னேற்பதுவிடுவென் றிசைப்பவெந்தையைப்
பார்ப்பதுவிடுத்தயன் பகர்வதயினான்

(இ-ள்) கொன்றைமாலைப்பிரகாசியாநின்ற சுவாமியினது திருமுடி மேலநின்றுவிழுந்ததும நாற்பதினாயிரம் வருஷங்களாகவந்தேனை இன்னமொன் பூமியிற்போகவில்லைவருந்தத்தோடுவருகிறேன் என்னைப் பிடிக்கவேண்டாம்விடென்று தாழம்பூசொல்லப்பிரமா சுவாமியைத் தேடுகிறதைவெறுத்துச்சிலவார்த்தை சொல்லததொடங்கினான் -எ-று.

துன்னியவுன்னையே துணையுமாய்நமக்
கின்னமுமலைவுறு திருக்கணீக்கினை
யுன்னிலுமுயிர்த்துணை யுறவுவேறிலை
யன்னியனல்லனா னனமுமல்லவே.

(இ-ள்) என்சமீபத்திலடைந்த தாழம்பூவேநீஎனக்குத்துணையாயிருந்து நாளினமுநதேடி யலையாமல் என்வருத்தத்தைநீக்கினையுன்னைப் பார்க்கிலும்முயிர்போன்றதுணையுமஉறவுமவேறில்லைநானும அன்னிய னல்ல அன்னபட்சியுமல்லவென்றுசொன்னான்பிரம்மதேவன -எ-று.(

நாமமோநான்முகனுமாலுமா
யேமமாமிதற்கள விசைசசவெண்ணினோன்
பூமிகீழிடந்தவன பொயினான்மகத
கீமையென்றிருமுடி தேடிக்காண்கிலேன்.

(இ-ள்) என்பெயரோ பிரமா நானும விஷ்ணுவுங்கூடி அக்கினிசொரூபமாகிய இந்தமலையினளவைத் தெரிந்துகொள்ள வெண்ணினோம பூமியினகீழிடத்தைப்பெயர்த்துகொண்டு அடியைஅவன்தேடப்போனான் பாவியாகியநான்முடியைக்காணவெகுநாளாய்த்தேடியுங்காண்கிலேன் -எ-று

அங்கிசலைவாவிது வதுகொண்டபய
னெடியனின்வாயினா னினைத்தசெய்தினற்
படியளந்தவனுடன் பறவையாமிவன்
முடியறிந்தானென மொழிதல்வேண்டுமே.

(இ-ள்.) ஆதியந்தமாக நடந்தசமாச்சாரமிது அதைக்குறித்துப்பேசுவதனாற்பயனென்ன பெருமைபொருந்தியஉன்னுடையநலவாயினாலே நினைத்தகாரியமுடிக்கால்தான்பயன்பூமியையளந்தவிஷ்ணுவினுடன்பகைக்கொண்டு பட்சியாயுருவெடுத்த இந்தபிர்மாசிவனுடைய முடியையறிந்தானென்றுநீசொல்லவேண்டுமென்றுபின்னுஞ்சொல்லுவான்பிரம்மதேவன்—எ-று. (௩௦)

வஞ்சமென்றிகந்திடேல் வருந்தினோர்க்குயிர்த்
தஞ்சமாமெனிற்பெரும் பொய்யுஞ்சாற்றலா
மஞ்சியேயுரைத்தகா மொழியுமாறிது
கஞ்சமுண்டமைவரே னன்புவேண்டினர்.

ஞ் சிவன் அருளிச்செய்து பிரமாவைப்பார்த்து உனக்குப் பூமியிலே கோயிலும் பூசையுமில்லாமற் போகக்கடவதென்று திருவுளம்பற்றினார் சுவாமி-எ-று. (

கைதையே யிவனொடு கரவு நீயுரை
செய்ததாற் றீண்டில மென்று நீத்தன
னெய்திய முனிவு கண்டே கஞ்சனமுகன்
மெய்தரையுறப்பதம் வீழ்ந்துபோற்றினான்.

(இ-ள்) வாராய தாழம்பூவே இந்தப்பிரமாவினோடு சேர்ந்து பொய்யாய சாட்சி சொன்னபடியினாலே உன்னை இதுமுதற்கொண்டு தீண்டோமென்று தள்ளினார் அதன்பின்பு சுவாமிக்கு இப்படிப்பட்ட கோபம் வந்ததைப் பார்த்து ஏக்கமெடுத்துப் பிரமாவானவன் தன்னுடைய தேகம் பூமியிலே தீண்டும்படிய விழுந்து வந்தனஞ்செய்தான்-எ-று. (௬௬)

வேறு.

பொடிமூடிய தழலே நிகர் புலையாணவமலமாஞ்
செடிமூழ்கை டாலே புழல் சிறியேனொரு பொருளோ
வடிவே பெருவெளியே சதுமறையே சதுமறையின்
முடிவே தனிமுதலே யெனை முனியேலெனை முனியேல்.

(இ-ள்) நீறுமூடிய நெருப்பையொத்த சுவாமியே சண்டாளத்துவமாகிய ஆணவமலமென்கிற செடிமூடிக்கொண்டிருப்பதினாலே அவிவேகியாய்த் திரிகின்ற சிறியேனொருபொருளோ உருவமானவரே அகண்டவெளியானவரே நான்குவேதமானவரே நான்குவேதத்தினுடைய அந்தமாகி நிற்கின்றவரே ஒப்பற்றமுதலாகியவரே கோபித்துக்கொள்ளவேண்டாம் கோபித்துக்கொள்ளவேண்டாம்-எ-று. (௬௭)

எண்டிசைகளு மொன்றாகிய வெழுவாரியு மறுகி
வெங்கீரதுவாரொடுடன் விளைவப்புனலுண்டே
நின்னீரமையிதென்றுலகுயிரெப்படி நிகழும்
முந்நீர்விடமுண்டோயெனை முனியேலெனை முனியேல்.

(இ-ள்) எல்லாத்திக்கினிலிருந்து ஒன்றாகிய ஏழுசமுத்திரமுஞ்சாய்ந்து வெண்ணீராயச்சட்டால் அலைதயாறுகிறதற்கு வேறேசலமுண்டோ உமக்கே இப்படிப்பட்ட கோபம் வந்தால் உலகத்திலிருக்கிற சீவாசிகள் எப்படிப் பிழைக்கும் முன்னே சமுத்திரத்திலே பிறந்த ஆலகாலவிஷத்தையுண்ட மூர்த்தி கோபஞ்செய்யவேண்டாம் கோபஞ்செய்யவேண்டாம்-எ-று. (௬௮)

பிறைபேருழுமதியேயுரை பெண்ணே பிறவாணே
நறையே நறுமலரேயென நானாவிதமாவை
பொறையே திருவருளே பொழி புயலேயியலிசையே
முறையே பலமுறையேயெனை முனியேலெனை முனியேல்.

(இ-ள்) மூன்றாம்பிறையாகியும் பூரணச்சந்திரனாகியும் பெண்ணாகியும் ஆணாகியும் தேனாகியும் புஷ்பமாகியும் மாலைகளாகியும் கிருபாவருஷத்தைப்பொழிகின்ற மேகமாகியும் சொல்லாகியும் நாதமாகியும்

சொன்ன தொண்டர்களுக்காக இரங்கிச்சுவாமியுந்திருவாய்மலர்ந்தரு
ளினார்-எ-று (அ௰)

கார்த்திகைக்குக்கார்த்திகைநா ளொருஜோதிமலை நுனியிற் காட்
டுவிப்போம்-வாய்த்தவந்தச்சுடர்காணிற்பசிபிணியில்லாதுலகின் மன்
னிவாழ்வார்- பார்த்திவர்க்கு மருந்தவர்க்குமிடையூறுதவறுமிதுபணிந்
தோர்கண்டோர்- கோத்திரத்திலிருபத்தோர் தலைமுறைக்குமுத்திவா
ழ்கொடுப்போமென்றார்

(இ-ள்.) வாருங்கள் விஷ்ணுபிரமாக்களே கார்த்திகைமாதத்தில்கி
ருத்திகைநட்சத்திரத்தில்மலையினுச்சியில் ஒருபிரகாசங்காண்பிப்போ
ம் அப்படிப்பொருந்திய சுடரைக்கண்டால் தரித்திரமும் வியாதியுமில்
லாமல்உலகத்தில்நிலைபெற்றுவாழ்வார்கள் இந்தசோதியைக்கண்ட அ
ரசர்களுக்கும்- அரியதவசிகளுக்கும்- இடையூறுநீங்கும் இதைப்பணி
ந்தவர்கள் தரிசித்தவர்களுடைய கோத்திரத்தில் இருபத்தொருதலை
முறைக்குமுத்திவரங் கொடுப்போமென்றார் அருணாசலேசுரர்-எ-று

மரணபவமறுக்கநல்லமருந்தாகுமதற்குமலைமருந்தென்றோபே
ரருணைவடிவாதலின லருணகிரியெனுமொருபே ரதனையோர்பால்- தர
ணியிலேயுரைத்தவர்க்குமூன்றுகோடியுஞ்செழுத்துச் சரித்ததாமென்-றி
ருணிலவுமிடற்றிறை வனிசைக்கமகிழ்ந் திறைஞ்சியவரிவசப்பதானர்

(இ-ள்.) இறப்பினையும் பிறப்பினையுமொழிக்குவதற்குமருந்தானபடி
யினாலிந்த மலைக்குமலைமருந்தென்றுபெயர் இந்தமலைசிவபுநிறமான
படியினா லருணகிரியென்று ஒருபெயர் அதைஒருதரம் பூமியிலேசொ
ன்னவர்களுக்குப் பஞ்சாக்ஷரத்தை மூன்றுகோடிதரமுச்சரித்ததற்
குச் சமானமாகுமென்று நீலகண்டத்தையுடையசிவன் அருளிச்செய்ய
விஷ்ணு பிரமாக்கள் சந்தோஷத்தையடைந்து சுவாமியைவணங்கிச்
சொல்லுவார்-எ-று (அஉ)

அந்தவருணகிரியானேயுனக்குவிண்ணீரலதுபுனலாட்டுவாரார்
தொடுத்தவுடுத்திரளலதுதிருமுடிக்குமணிமாலைசூட்டுவாரார்
கடுத்திகழுமிடற்றோனே கதிர்களன்றிமணிதீபங்காட்டுவாரார் (றார்
னடுத்திறைஞ்சிப்பூசைசெயவிதன்கீழோரிலிங்கவடிவெடுப்பாயென்

(இ-ள்.) அருணாசலேசுரரே மழையாகியவுமக்கு ஆகாயத்தில்நின்று
பெய்யாநின்றமழையேயல்லாமல்சலங்கொண்டுவந்து அபிஷேகஞ்செ
ய்கிறவர்களார் நக்ஷத்திரக்கூட்டங்களே முத்துமாலையாவதலலது வே
றேமுத்துமாலைசூட்டுகிறவர்களார் சூரியசந்திரகணமேதீபமாவதலலாமல்
தீபங்கொண்டுவந்துவேறேகாட்டுகிறவர்களார் ஆனபடியினாலே நாங்
களபிஷேகமுதலானதுகள்செய்து பூசைசெய்வதற்கிந்த மலையின்கீழ
ஒரு இலிங்கரூபமாயெழுந்தருளவேணுமென்று கேட்டுக்கொண்டார்
கள்-எ-று. (அங

அன்னதுவாயிருக்குதுநீர் காமியத்திலருச்சியுமென் றசலம்புக்கா
ரெண்ணிலமுதபுகழவங்கோர்சிவனுருவமூலைதந்ததுகண் டிறைஞ்சினர்த்தி
மன்னியபூமழைபொழிந்துபரவசமாய்மகிழ்ந்துதாடிமயனைக்கூவித்
தன்னிகரில்லகோபுரமுமண்டபமுமணிமதிலுஞ்சமைப்பித்தார்கள்.

ந்றேன்றி-புரியசிவனிடங்கலந்தகதையுமுரைத் தருளுகெனவுரைப்ப
தாளுன.

(இ-ள்) நந்திகேசுரர் மார்க்கண்டேயரிஷியைப்பார்த்துவிஷ்ணுவும்பிரமாவும் அறிதற்கரிதாகிய திருமலையினது சிறப்பை என்னாலசொல்லுதற்கரியதெனினும என்ககுகதெரிந்த அளவில்சிறிது உமககுததெரியுமபடிச்சொன்னேன் இனிசசொலலவேண்டிய தென்னவென்றுரவரிலைசபெற்றமார்ககணடேயரிஷி சநதோஷித்துகணககிசுவமியானைரோசகித தவஞ்செயது அவரிடப்பாகமபெறறதுவும சொலலவேண்டுமென்றுகேட்கச் சொல்லத்தொடங்கினா-எ-று. (அஅ)

இரண்டாவதுதிருமலைச்சருக்கமுற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-ககூசு.



உ

சிவமயம்.

## மூன்றாவது

## பார்வதியார்திருவவதாரச்சருக்கம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

பண்ணுவர்பதினெருவ ரெழுவரெணமர் திசைக்கிறைவர் பணிந்தேட்டுள்ளோர, கின்னரகிம்புருடசித்தரியக்கரினையலர்முனிவர்கிளை மிருன்னோர்,எண்ணுமலரயன்திருமால் கலைமகள் நதை மலர் மடந்தைமகிழ்ந்துசூழ, மூவாவலையிகழ்ந்துதக்கன் முடியாத பெருவேள்விமுடிக்கலுற்றான்.

பூருவகண்ட.

கேளுமார்க்கண்டேயரே முன்னாளிலே பிரமாவினிடத்திற்பிறந்தக்கனென்பவன் அரியதபசுசெய்து உயர்தவரங்களைப்பெற்று
[illegible]ரண்டுபிள்ளையுமபெற்றதனுளிவ்வாறுகாலத்திலே பார்வதியான

ள்தன்னிடத்திலேபிறக்க அந்த அம்மனைச்சுவாமிக்கு கலியாணஞ்செய்துகொடுத்து மாமனுக்குப்படிவரம்பெற்று அந்தப்படிசெய்தபின்பொருநாளிவன்சுவாமியினுடையசபைக்குப்போனான் அவ்விடத்தில்சுவாமிதனக்குஎழுந்துமரியாதைசெய்யவில்லை என்கிறகோபங்கொண்டு தன்னுடையவீட்டுக்குவந்து சுவாமியைப்பார்க்கிலும் உயர்வை[illegible]யவேண்டுமென்று.

(இ-ள்.) பன்னிரண்டுசூரியர்கள் - பதினொருருத்திரர்கள்- சத்தரிஷிகள்-அஷ்டதிக்குப்பாலகர்-நாகலோகத்தார்- கின்னரர்-கிம்புருடர்-சித்தர்-யட்சகர்-தேவர்கள்-முனிவர்கள்-நிலைபெற்றபிரமா-விஷ்ணு- சரஸ்வதி இலட்சுமிமிகவுஞ்சந்தோஷத்தையடைந்துசுற்றிக்கொள்ள எல்லோருக்கும்முதல்வராகிய பரமசிவனைநிந்தித்து முடியக்கூடாதபெரியயாகஞ்செய்யத்தொடங்கினான்-எ-று. (க)

எந்தைசெயுமகம்பார்க்க விடையருளென்றிறைக்கிறைவி விசைத்தாளெந்தை, புந்தியிலாதிகழ்ந்தனனென் றுரைத்தனனீதெனை வேண்டிப்பொறுப்பாயென்று, வந்தனஞ்செய்தனளவளை நகைபுரிந்துகடிதுசென்றுவருவாயென்றான், கந்தமலர்குழலாளுந் தந்தைமகந்தொடங்குகன தவத்தைச்சார்ந்தாள்.

(இ-ள்.) பார்வதிதேவியானவள் தகப்பனாகியதக்கன்யாகம்பண்ணுகிறதைக்கேட்டுசுவாமி என்னுடையதகப்பன்செய்கிறவேள்வியைப்பார்த்துவருகிறதற்கு உத்தாரவுகொடுமென்றுகேட்க அதற்குசுவாமியானவர் உன்னுடையதகப்பன் புத்தியில்லாமல் என்னைமிகவும் நிந்தித்திருக்கிறானே நீபோகலாமாவென்றுசொல்ல அதைக்கேட்டுசுவாமீ என்தகப்பன்செய்த இந்தக்குற்றத்தைஎனக்காகவேண்டிப்பொறுக்கவேண்டுமென்று நமஸ்காரஞ்செய்தபோது அந்தஅம்மனைப்பார்த்துநகைத்து நல்லதுநீபோய்சீக்கிரத்தில்வந்துசேரென்றுசொல்லப்பார்வதியும் தகப்பன்யாகஞ்செய்கிற இடத்துக்குப்போனாள்-எ-று ( )

தாயரைக்கண்டடிதொழுதா ளவட்டமுறவாதிருந்தனன்றந்தை யானன், தீயவனைப்பணிந்தனளாங்கவனுமிகழ்ந்தானிகழ்ந்தசொல்லைநோக்கிப், பேயிருக்குஞ்சுடலையெனப்பிழைபிறந்துவிடுகவுங்கள்பெருவாழ்வென்று, வாய்பிறைக்குங்கொடுமைசொலி மறைந்தனளச்செயலறிந்தான் மங்கைபாகன்.

(இ-ள்.) பார்ப்பதியானவள் தக்கன்யாகசாலைக்குப்போய்தன்னுடையதாயைவணங்கினாள் அவள் இந்தஅம்மனைத்தழுவி உபசாரஞ்சொல்லாமலிருந்தாள் அதன்பின்பு தீமைபொருந்திய தகப்பனைவந்தனஞ்செய்ய அவனும்நிந்தித்தான் அதைப்பார்த்துக்கோபங்கொண்டு உன்னுடையயாகசாலைவாழ்வுபேயிருந்து விளையாடுஞ்சுடலையாகிப்போகக்கடவதென்றுசபித்து இந்தப்பாவி வளர்த்ததேகம்இருக்ககூடாதென்றுயோகத்தினாலேதன்னுடைய தேகத்தைவிட்டாள் அந்தச்செய்கையையுணர்ந்தார்சாம்பவமூர்த்தி-எ-று. (௫)

(கலிவிருத்தம்) உண்ணிலாவுவஞ்சிசெல்ல ,வொருவனுவியுய்யுமோ
தண்ணிலாமுடிக்குணின்றுதழலைமொண்டிறைக்கவு

லண்ணல்வெம்பிமூனிவுகொள்ளு மளவினெற்றிவிழிதனில்
விண்ணடுங்கமண்ணடுங்க வீரன்வந்துதோன்றினன்.

(இ-ள்.) எப்பொழுதுமகூடயிருந்த பார்ப்பதிதேகதனை விட்டவுடனே ஒன்றியாகியிருந்த பரமசிவனுடையஉயிர்சவுக்கியதனையடையுமோ குளிர்ச்சிபொருந்தியசந்திரன் தயமுடையசிரசிலேதானேயிருந்து நெருப்பைவாரிச்சொரிகிறபடியினாலே அதிகதாபதனையடைந்ததுமதக்கனாகிய பாவியினாலல்லவோ இந்தவருத்தம் உண்டாச்சுதெனறுகோபித்துக்கொள்ளுமபோது அவருடையநெற்றிக்கண்ணிலிருந்துவீரபத்திரானவர் ஆகாயஉலகமும பூமியும் நடுங்கும்படியாகத்தோன்றினர்-எ-று. (௪)

மஞ்சுபற்றியுடல்கறுத்து மணிமயூரமுடியுடன்
சஞ்சரிக்குமேருவென்ன விடிமுழங்குதழலின்வாய்
நஞ்சுகொப்பளிக்கவெற்றி நயனமூலகொதிக்கவே
லஞ்சலித்தகையோடெங்க ளையன்வந்துதோன்றினன்.

(இ-ள்.) மேகத்தைப்பார்க்கிலும்உடமபுகறுத்துமயிலினதுநிறம்போன்ற மரகதரத்தினமிழைத்த கிரீடத்துடனே சஞ்சரிக்கின்றமேருவுக்குச்சமானமாகி இடிபோல்முழங்குகின்றநெருப்பாகியசொற்களையுடையவாயானது நஞ்சைககொப்பளிக்க நெற்றிககண்கொதிக்கச்சிரசின்மேல்வைததுக் கூப்பியகைககளோடு எமதுஐயராகிய வீரபத்திரர்வந்துதோன்றினர்-எ-று. (௫)

ஒழிததசிங்கவுரிபுயத்தி னுத்தரீயமாகவே
கழிதெறிந்தவல்லியத்தி னதளிசைதசசசையாய்
விழித்திமைக்குமுன்னம்விண்ணின் வெளியடைத்தமேனியா
தழைததென்னைவென்னவென் றனையன்வந்து தோன்றினன்.

(இ-ள்) இரணியனைக்கொன்ற நரசிங்கத்தினுடையதோல்உத்தரீயமாகவும்தாருகாவனத்துரிஷிகளால்விடப்பட்டுசுவாமியினால் மரணத்தையடைந்த புலியினதுசர்மம் இடுப்புக்கச்சையாகவுமவிழித்து இமைக்கிறதற்குமுன்னே ஆகாயமெல்லாமறைந்ததேகத்துடனே என்னையழைத்தது என்னகாரணம் என்னகாரணமென்றுவீரபத்திரர்வந்தார்-எ-று. (௬)

மூக்கணைத்தனீர்கொடாது கனல்கெடுக்குமுகிலென
தக்கன்வேள்வியைத்தகர்தது மீள்கியென்றுசாற்றினு
ணக்கணத்திறுவகைபொங்கி யடிவணங்கியேகினன்
பக்கநின்றபூதநாதர் பாரிடங்கள்சூழவே.

(இ-ள்.) என்னையழைத்தகாரியமெனனவென்றுகேட்டவீரபத்திரரைப்பார்த்து மூன்றுகண்களையுடைய பரமசிவன் சலததைப்பொழியாமல்நெருப்புகளைக்கக்கும மேகம்போற்போயதக்கனுடையயாகததையழித்துவாவென்று அருளிச்செய்ய அந்தட்சணமேவீரபத்திரர் அதிகசந்தோஷத்தையடைந்து சுவாமியினது திருவடியைத்தொழுதுபக்கத்திநின்றபூதக்கூட்டங்களும் பேய்களுஞ்சூழப்போனார்-எ-று. ()

நஞ்சுகொப்பளிக்குநாக நாவிரண்டுமாலையா
னஞ்சாட்டிபூதலே வாலவட்டம்வீசவே

குஞ்சரங்களொட்டையுங் குதம்பையாகவிட்டவெண்
கஞ்சுகத்தர்நால்வர்தூய கவரிநின்றுவீசவே.

(இ-ள்.) விஷத்தைக்கக்குகின்ற அஷ்டமாநாகங்களை மலையாகத் தரித்துக்கொண்டு பத்துப்பூதங்கள் நீலவானமான ஆலவட்டம் வீசிக்கொண்டுவரத் திக்கிலிருக்கின்றயானைகளொட்டையுங் காதிலேகுண்டலமாகத் தரித்துக்கொண்ட வெள்ளைச்சட்டையணிந்த நாலுபேர்கள் சுத்தமாகிய சாமரம்வீசவும் புறப்பட்டார் வீரபத்திரர்-எ-று.

தீயிருந்தவுதரவெமமை விண்பிழிந்துதீர்த்திடும்
பேயிரண்டுநாறுநாறு காகளம்பிடிக்கவே
வாயிரண்டுபோலுமாலை மதியிடைந்தபூதமோ
ராயிரங்கவிக்கமுத்தி னாதபத்திரங்களே.

(இ-ள்.) வடவாமுகநெருப்புக்குடிகொண்டிருந்தவயிற்றினுடைய பசியையெல்லாம் மேகங்களைப்பிழிந்துகுடித்து ஆற்றிக்கொள்ளுகின்ற இரண்டாயிரம்பேய்கள் எக்காளம்பிடிக்கவும் சந்திரனை இரண்டாகப்பிளந்து இரண்டு கடவாயிலும் வைத்ததுபோலுமிருக்கின்ற ஆயிரம்பூதங்கள் முத்துக்குடைகள்பிடிக்கவும் புறப்பட்டார்-எ-று. (௯)

மாயுமாயாதந்தசங்கு கோடிகோடிமருகவே
தீயின்வாயினூர்திதந்த சிங்காரசமூதவே
சாயுமெனவில்காலனூர்தி தந்தகொம்பிசைக்கவே
யாயிரங்களிறிழுத்த தன்னதேரிலேறினன்.

(இ-ள்.) இறந்திறந்துபிறக்கிற அநேககோடி விஷ்ணுக்களுடையகையிலிருந்தசங்குகளை அநேகபூதங்கள்வாயில்வைத்துஊதிவாவும் இறந்த அக்கினிபகவான் வாயுபகவானேறுகின்ற ஆட்டுக்கடாக்களுமானதுகளுடையகொம்புகளை வாயில்வைத்து அநேக பூதங்களூதவும் இறந்துபோன யமராசாக்களேறிய எருமைக்கிடாக்களுடைய கொம்புகளை வாயில்வைத்து அநேகபூதங்களூதவும் ஆயிரம் யானைகள்கட்டியிழுக்கிற தேரிலேறினார் வீரபத்திரர்-எ-று. (௰)

சிலகணங்களானையான சிலகணங்கடோதா
யுலவுகின்றசிலகணங்க ளோடுகின்றவாசியாய்
மலைவுகொண்டசிலகணங்கள் மனிதர்தேவராயின
வலகைதானுமளவிலா தனந்தவேடமானதே.

(இ-ள்.) அப்படிவீரபத்திரர் தேரிலேறினபோது சிலபூதங்கள் யானைரூபங்கொண்டதுகள், சிலபூதங்கள் தேரினுருவங்கொண்டதுகள் சிலபூதங்கள்குதிரையானதுகள், சிலபூதங்கள் மனிதரூபமும் தேவருமானதுகள், அளவிலாதபேய்கள் அனந்தரூபங்கொண்டு புறப்பட்டதுகள்-எ-று. (௰௧)

வீரையேமடங்கவுண்டும் விடாய்கெடாதமீளுமே
பாரவேழுபாரமுண்டு பசிகெடாதுபடருமே
கூரவேலெறிந்துகால னுடுகெடக்கொள்ளுமே
போரையேவிரும்பிமுன் னடந்துசென்றபூதமே.

(இ-ள்.) வீரபத்திரர்புறப்பட்டவுடனே யுத்தஞ்செய்யவிரும்பி அவருக்குமுன்னேநடந்தபூதங்கள் ஏழுசமுத்திரத்துநீரடங்கலுங்குடி

தாலும் விடாய்தீராமல் திரும்பும்பாரமாகிய ஏழுலகத்தையும் சாப்பி ட்டுப்ப சிபோகாமல் அலைந்துக்கொண்டிருக்கும கூர்மைபொருந்திய வேலாயுதததைஎறிந்து யமனுடையகோட்டைகளைக்கொள்ளுமனு ப்படிப்பட்ட வலிமையுடையதுகள்-எ-று. (௯௨)

கொண்டலேழையுஞ்சிவந்த குஞ்சிமீதுசுற்றுமே
புண்டரீகாண்டமும் புகைகொளுததிமீளுமே
யெண்டிசாமுகத்தைநாடி யாகசாலைதேடுமே
சண்டவாயுவென்னவலைக தட்டியோடுபூதமே.

(இ-ள்.) ஏழுமேகங்களையும்பிடிததுச் சிவந்ததலைமயிரிலேசுற்றி க்கட்டிககொள்ளும் அனேகபிரமாண்டங்களையும புகையுண்டாக நெ ருப்பினாலேகொளுத்தும எட்டுத்திக்குந்தேடி யாகசாலை யெங்கேயெ னறுதேடும் பிரசண்டவாயுபோலக் கைகளைககொட்டிககொண்டு வீர புததிரன்பின்னேயோடுகிறபூதஙகள-எ-று. (௯௩)

வெள்ளவாழிமதுநுகர்ந்து வீறுகின்றசிலகணக்
துள்ளவந்துபுவனமுற்றுஞ் சுற்றுகின்றசிலகணக்
தள்ளுகின்றபேர்களென்று சாய்க்ககின்றாகைசெயும்
பள்ளிகொள்ளுமுடனெழுந்து பரிவுகொண்டுபாடுமே.

(இ-ள்.) வெள்ளமாகியசமுத்திரமபோன்ற மிகுந்த மதுவைப் பானஞ்செய்து ஆரவாரித்தெழுந்து கொண்டு சண்டைககுஎழுந்தருகள் சிலபூதஙகள் நமமுடையகுல மியைத்தள்ளுகிறவர்கள்-யாரெனறுகே ட்க அவர்களைசசொல்லுகிறதறகாக நின்றுவீரநகைகொள்ளும் சிலபூ தங்கள் நித்திரைசெய்யும சிலபூதஙகள் உடனேஎழுந்து அன்புகொ ண்டுசிவனைககுறித்துபபாடும-எ-று. (௯௪)

வெதிர்சிலம்புமுரசுசஙகம விருதுபம்பையதிரவே
புதியகண்டைமணிதவண்டை புரிமதஙகமழுகவே
கதிகடந்துயாகசாலை கண்டுபூதகணமெலா
மதிகிமைந்தானபோகஙகளையுமவாரிவீசினர்.

(இ-ள்.) வீரபததிரசுவாமிபுறப்பட்டவுடனே புள்ளாங்குழல் சி லம்பு முரசு-சங்கங்களவிருதாகியஉடுக்கைமுதலான வாததியமுழங்க வும், பெரியமணிதவண்டை மிருதங்கம சத்திக்கவும்வழிமுழுதுமபோ யதககனுடையயாகசாலையைக்கண்டு எல்லாப்பூதகூட்டங்களும அ திதியினுடைய பிள்ளைகளாகிய சகலதேவர்களையும ஆகதிவாரி வீசி னதுகள்-எ-று. (௯௫)

காரிலேறினையிலேறி கடாவிலேறியலகைமே
லேறிலேறிமகரமேறி யிரலையேறியலகையாம
பாரிலேறிமானமேறி பகுவிலேறியெண்மருந
தேறிலேறிவகதவீரர் சேனைமாளமோதினர்.

(இ-ள்) மேகவாகனனாகியதேவேந்திரனுமஆட்டுக்கடாவிலேறு கின்றஅககினியும் எருமைக்கடாவாகனனாகிய யமனும பேய்வாகன னாகிய நிருதியும் மகரவாகனனாகிய வருணனும் மானவாகனனாகிய வா யுபகவானும் அளகாபுரியையாண்டு விமானததிலேறுகின்ற குபேர னும் எருதுவாகனனாகிய ஈசானியனுமாகிய எட்டுபபோகளுந தேரி

ஞலேநீங்கியது- இந்தமெய்மையாணஸ்தலத்துக்குத்தென்பாரிசத்தில் ஒருநகரம்பிரகாசிக்கு மதைநினைத்தால் மூத்தியுண்டாகும-எ-று.

ஆரணன்றிருமாறேட வடிமுடியொளித்துஞானப்
பூரணவொளியாய்மேல்கீ ழுலகெலாம்பொருந்திநிற்போம்
தாரணியவர்க்குமற்றைச் சயிலமாயிருப்போமங்கே
வாரணிமுலையாய்பாகந் தருகுவோம்வருதியென்முர்.

(இ-ள்.) பிரமாவும், விஷ்ணுவும்தேடப்பாதமும், சிரசும், அவர்க்குத தெரியாமலொளிததுப் பூரணமாகிய ஞானவொளியாகிய மேலகீழுலகங்களெல்லாம் ஒன்றாயநிறபோம்-பூமிகளிலிருப்போர்க்கு மலையுருவமாயிருப்போம-அவவிடததில்வந்தால் கசசணிந்த தனத்தையுடையபெண்ணே இடப்பாகத்தைததருமோம் வாவென்றுர் பரமசிவன்-எ-று. (உச)

என்னலுமிறைவிசொல்வா ளினிமைசேர்கயிலைகாசி
தன்னிலுமினிதுகாஞ்சித தலமெனவுரைததீரிந்த
நன்னிலந்தனக்குச்சோணை நகரமேயதிசமென்றீர்
பின்னையுமுளதோவந்தத தலததினுக்கிணையாம்பேருர்.

(இ-ள்.) பரமசிவன் அப்படிதிருவுளம்பற்றிய அளவில் பார்வதிய மமை சொலலுவாள்-இனிமைசோர்த கையிலாயம்காசி இவ்விரண்டு தலஙகளிலுமஇந்தககாஞ்சீபுரம் அதிகமென்று அருள்செய்தீர் அத்தலத்துககுச்சமானமாகிய பெருமைபொருந்தியஸ்தலம்வேறொன்றுண்டோவென்றுள் பாாவதியமமை-எ-று. (உரு)

அவ்வுரைமறுத்தெமகோமானருளுவானமக்கொப்பான
தெய்வமைந்தெழுத்துமானத் திருந்துமந்திரமுமில்லை
சைவமேயனையதான சமயமுமருணைபோல
வெவ்வினைதவிாக்குமூருமிலையெனவிளம்பிப்போனுர்.

(இ-ள்.) அப்படிபார்வதிசொன்னவார்த்தை நமையச்சுவாமியானவர்மறுத்து நமக்குச்சமானமாகியதெய்வமும் பஞசாக்ஷரததிற்கொப்பான மந்திரமும், சைவத்திற்குச்சரியானசமயமும், டொல்லாதபாவங்களைத்தீர்ககும் அருணுசல ஸ்தலத்திற்குசசரியானஸ்தலமும், உலகத்தினில்லையென்றுதிருவாய்மலர்ந்துகைலாயத்திற்கெழுந்தருளினுர்-எ-று. (உசு)

கொம்பனாள்பொறுப்பாயதென்றிறைவனைக்குவித்துப்போற்றிக்
கம்பையாறகன்றுகாஞ்சித தலததையுங்கடந்துவேலன்
தும்பிமாமுகத்தோன்கன்னி வயிரவர்கணங்களசூழச்
செம்பொனுள்கவரிவீசச சிவிகைமேற்சிறந்துசென்றுள்.

(இ-ள்) புஷ்பக்கொம்பையொத்த பார்வதியானவள் சுவாமிநான்தெரியாமல்சொன்னவார்த்தையைப் பொறுத்துக்கொள்ளுமென்று இரண்டுகைகளையுங்குவிதது வணங்கிக் கம்பையாற்றைவிட்டுக் காஞ்சிபுரததையுங்கடந்து சுப்பிரமணியர்-கணபதி- சப்தகன்னிசள்- வயிரவர்-சிவகணங்களசூழவும, இலட்சுமி சவரிவீசவும், பல்லக்கி லெழுந்தருளிஞள்-எ-று. (உஎ)

மண்மகண்மகிழப்பட்ட மரங்களுந்தழைத்துவீறிக்
கண்மலர்சொரியக்கல்லு மலைகளுங்கரைந்துசோர
வெண்மலாமடவாள்போற்றக் காவதமிரண்டுநீங்கி
விண்மதிமுகத்தாண்மறமோர் வெள்ளிடையருகிறசேர்ந்தாள்

(இ-ள்.) பூமிதேவிக்குச் சந்தோஷமுண்டாகப் பட்டுப்போன மரங்களுந் தளிருண்டாகிசதழைத்துத் தேனோடும் புஷ்பங்களைச் சொரிய பாறைகல்லுகளும் பெரியமலைகளுங் கரைந்துருக வெள்ளைதாமரைப்பூவில்வாசஞ்செயயும் சரஸ்வதிதோத்திரஞ்செய்ய இரண்டுகாதமபோயச் சந்திரனையொத்த முகத்தையுடைய பார்வதிஒருவெளியிடத்திலிறங்கினாள்-எ-று. (௨௮)

வெய்யவனுமையாரென்று வினவுகாரணத்தானீலக்
கையவன்மரகதத்திற் கரியவள்காமுங்காலுஞ்
செய்யவள்வருந்தினாளென்றறிந்துயிர்சிதைப்பான்போலப்
பையமேறகடலிற்பாய்ந்தான்குமரவேள்பந்தல்செய்தான்.

(இ-ள்.) சூரியனானவன் தன்னையாரென்று பரமசிவனைக்கேட்டதனாலே நீலம்போன்றகையும், மரகதம்போன்றவடிவமும் தாமரைப்பூப்போன்ற உள்ளங்கையும், உள்ளங்காலும் பொருந்திய அம்மன்சாபத்தினால் வருந்தினாளென்றறிந்து தன்னுயிரைவிட்டுவிடுகிறவன்போல மெள்ளமெள்ளமேற்குச்சமுத்திரத்தில் விழுந்து அஸ்தமித்தான்-சுப்பிரமணியர்அம்மனிருக்கிறதற்காக ஒருபந்தல்போட்டுவைத்தார்-எ-று.

அந்தஸ்தலத்திற்கு வாழைப்பந்தலென்று இக்காலத்தில் வழங்கிவருகின்றது

அன்னையுங்குகனைநோக்கி யரம்பையாற்பந்தல்செய்து
பன்னிருகாமுஞ்சால வருந்தினையெனப்பாராட்டிப்
பின்னுமோர்கருமஞ்சந்தி முடிப்பதற்கினியநன்னீர்
கைந்நிறைவேலைவேவி யழைத்திடுகணத்திலென்றாள்

(இ-ள்.) அதன்பின்பு பார்வதியானவள் சுப்பிரமணியரைப்பார்த்து வாழைமரத்திலே பந்தல்போட்டுப் பன்னிரண்டுகைகளும் சிவக்கவருத்தத்தையடைந்தாயென்று பிரியவசனஞ்சொல்லி இன்னுமொர் வேலையிருக்கின்றது அதென்னவென்றால் சந்தியாவந்தனஞ்செய்கிறதற்கு நல்லபரிசுத்தமானஜலம்வேண்டும் உன்கையிற்பிடித்திருக்கிற வேலாயுதத்தைவேவிஅழைப்பியென்றுசொன்னாள்-எ-று. (௩௰)

காதலாவிலைஞ்சிக்கந்த னேவினன்கைவேலவ்வேல்
போதவான் புத்திராண்டன்புகழ்புருகூதன்போதன்
வாதிபாண்டரங்கன்சோமன் வாமனென்பவுரைவாட்டி
மீதிவேழ்கிரியைவிட்டிக்கொணர்ந்ததுவேலைநீத்தம்.

தொழுகுகிற அவர்களுடைய இரத்தத்தோடு ஜலங்கலந்து சிவந்துபோய் விட்டது-உனக்கொரு குற்றமுமில்லையென்றுசொல்ல அம்மன் பாதத்தில் சுப்பிரமணியர்வணங்கிச சந்தோஷமாயிருந்த அளவில் மலையிலே தவஞ்செய்து கொண்டிருந்த முனிவர்களுடைய இரத்தத்தினால் சிவப்பு நிறத்தையடைந்ததுபோலச்சிவந்ததுசெவ்வானம்-எ-று. (௫௫)

வித்தகர்கண் புதைக்குமுனம் பார்தவிருண்மறுவையிற குழ்வினை போல, வத்தலத்திலுமையவளைப் பின்பிடித்தாலெனப்பரந்த தக்கா,முத்தமியோசிறுகதவிப்பாந்தலின்கீ ழிருப்பவளென் றும்பர்டட, மித்திலப்பந்தனிகராயவிளங்கியது தாரகையானெருங்குமகானம்.

(இ-ள்.) சுவாமியினுடைய கண்களை முன்னேமூடின திருலேலஉலக மெலலாம் பரவியவிருளானது ஒருவனுக்கு மறுமையிலவந்து பிடித்துக்கொள்ளுகிற பாவகதைப்போல அந்தஸ்தலததில் பிறகுவந்து அம்மனைப்பிடிதததுபோலிருந்தது பார்வதியோ ஒருவாழைபபந்தலின்கீழிருப்பாளென்று தேவாகள்போட்டுவைத்தமுத்துப்பந்தலையொத்திருந்தது நட்சத்திரங்களால்நெருக்கப்பட்ட ஆகாயம்-எ-று. (௫௬)

மாலையெனுங் குமரியிருண் மகிடமுகமகற்றியந்தி வானச்சோரி, கோலமுடன்படிகலியகங் கொண்டதுபோன்மதிநெடுநாகுடபாற்சென்று, தாலமணி மிடற்றிறைதன் விழிபுதைக்கவளைாதவிருளினைத்தீங்கப், பாலமிசைவெடித்தெழுந்த விழியெனவேயெழுந்ததுசெம்பரிதிதானே.

(இ-ள்.)மாலைக்காலமென்கிறதுர்க்கையானவள்இருட்டாகிய மகிடாசுரன்தலையையறுத்து அதனால்செவ்வானமெனறுசொல்லபபட்ட இரத்தகோலத்தோடுபொருந்தியஸ்படிகலிங்கத்தைக்கைகொண்டதுபோல சந்திரனுதயமாகிமேற்குத்திக்கிலஸ்தமித்தது நீலகண்டராகிய பரமசிவனது இரண்டுநேத்திரங்களையும் அம்மன்புதைத்த அளவில் நான்குதிக்கும்பரவியஎல்லாவிருளும்,போகும்படியாயவிழித்தஅச்சுவாமியினது நெற்றிக்கண்போலச் செம்மைநிறமபொருந்திய சூரியனகிழக்குத்திக்கில்உதயமானான்-எ-று. (௫௭)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கங்கைகிராஞ்சேயாற்றிற்காலைசந்திகடன்கழித்து, மங்கைகனகச்சிவிகையின்மேன்மறையோலமிட வழிகொண்டாள், பங்கமலந்திர வழியடியார் கொடியவினையாம்பஞ்சமலைக், கனகிமலையாயவிளங்கியசி வண்ணமலைகண்டு தொழுதாள்.

(இ-ள்.) பார்வதி கங்கைக்குச் சமானமாகிய சேயாறென்கிறநதியில் காலைக்கடனை முடித்துக்கொண்டு பொன்மயமாகிய பல்லக்கிலேறி வேதகோஷமுழங்க நடந்து பகைப்படுத்து மும்மலங்களைத் தீர்க்கிற அடியார்களுடைய பாவமாகியபஞ்சமலைக்குநெருப்புமலையாய விளங்கிய திருவண்ணாமலையைப்பார்த்துச்சாஷ்டாங்கமாகச் சேவித்துக்கொண்டாள்-எ-று. (௫௮)

அறுசீரடியாசிரியவிருத்தம்- வேறுவண்ணம்.

வென்றியிறுக்கவர்ந்தபொருள்புகிர்த்திறைவியபயாடும்வேனிற்பர்

லை, குன்றமெல்லாம் வெறியாடன் முல்லையெலாம் பொதுவர் மின்னார் குரவையாடன், மன்றல்கம ழிந்திரற்கு விழாவெடுத்துக்கொண்டாடன் மருதவேலி, முன்றிலெலாஞ் சினச்சுறவு நுளைஞர் பணைக்காடு முந்நீர் நாககானல்.

(இ-ள்.) கல்லணையினுடேயபாலைநிலத்தார் வழிச்செல்வோரை அடித்துப்பறித்த பொருளைப்பங்கிட்டு அந்நிலத்திலிருக்கிற துர்க்கைக்குப் பலிபோடுவார்கள்; மலைகளையுடைய குறிஞ்சிநிலத்தில் இருப்பவ[illegible] ஆடு விழாவெடுக்கிற பூசைபோடுவார்கள், முல்லைநிலத்தில இடைச்சிகள் குரவைக்கூத்தாடுவார்கள், கற்பகமாலையைத்தரித்த தேவேந்திரனுக்கு மருதநிலத்தார் உச்சவஞ்செய்வார்கள், முற்றங்களில் சுறாமீன்களைக் காயப்போடாநின்ற கடலருகாகிய நெய்தனிலத்திலிருக்கிறவர்கள் வருணனுக்குத் திருவிழாச்செய்வார்கள்—எ-று. (௩௯)

சோதிபெறு காரகமறையவப்புசொரிகையினாற்றூய்மையாய
மாதலமெல்லாங்கலந்தமகிழ்ச்சியினாற் பொன்கலந்துமருவுதலால்
போதகளிசனகைகளைப்பெருகுதலான் மதுவுடைய பொருதல லே
சீதரனைசிராசகதிருநதிகாறுமிலைசசெளலாகுசிறந்ததன்றே.

(இ-ள்.) திருநதியானது ஒளிபொருந்திய திக்கைகளையுடைய யானைகள் மழையச் சலத்தைப்பெருக்கி வருதலாலும், பரிசுத்தமாகிய பெரிய பூமியெல்லாம் பரவிய சந்தோஷத்தினாலும், பொன்பொடிகளையுந் திரட்டிக்கொண்டு வருதலாலும், மஞ்சள்பொடிகளைப் பெருக்கினபடியாலும், தேனைக்கூட்டுடைந்து மோதுதலினாலும், என்றுதிக்குப் பொருள்கொண்டுசிலேடைவகையால் கானுடைய அகமறையப்பாணங்களைச் சொரிதலாலும், தாய்மைபொருந்திய கோபிகாஸ்திரீகளைச் சேர்ந்திருக்கிறதினாலும், வைஷ்ணவ உருகந்தனையசெய்கிறபடியினாலும், பதுவெலுதற அசுரன் சாயுஜ்யதஞ்செய்தலாலும் விஷ்ணுவுக்குசசமானமாகநாலு குணங்களினுஞ்சிறந்தது-எ-று. (௪௰)

இதுமுதலைந்துபாடல் வயற்சிறப்புக்கூறுகும்.

பேவுபுலவல்பாசதொழுகக குளிர்ந்துமயிர்பொடித்ததுபோல்வித ந்திறசேழும்பி, காவிலுறைபசுங்கிளியின் சிறகெனவேபசந்து தோன்ற லடக்கிரியமுற்றி, கூவுகின்றவாரணத்தின் தம்போலசிரசெழுந்து குறையிலசாலி, பாவையுமைச்சவமபுரியுக்தலமிதெனப்பணிந்தனபோற படிந்தனவே.

(இ-ள்) அந்தநிருநதியில்வந்த நீர்பாந்தொழுகிறபடியினாலேகுளிர்ந்த பூமிதேவியினுடைய தேகத்தின் மயிர்க்குச்செறிந்ததுபோல குறைவிலலாத நெற்பயிர்களுண்டாகத் தோப்புகளின் வாசஞ்செய்கிற பச்சைக்கிளிகளின் சிறகுபோல பச்சைநிறத்தையடைந்து தோன்றுகதிராய் முற்றிக்கூவுகின்ற கோழிக்கழுத்துப்போலசிரந்து பார்வதிபாகன் தவஞ்செய்கிறதலம் இதுவென்று வணங்கினதுபோல வளைந்து கிடக்கின்றன-எ-று. (௪௧)

சந்ததமுமேருழவர்பதம்பார்த்தங் கரிந்தவரிக்கதிர்ப்பரி, இந்திர ஞருலகிஞேடுபோர்செய்வானெழுந்லையாமென்னப்போர்ச்சீ, தந்திர

மேசுற்றிரவிபுரவிகள்போற் கடாவிடுகதேயாற்றித்தூற்றி, மந்தரமாமே
னைகருவித்து வழங்குகினுந் தொலையாதெனை மருதவேலி.

(இ-ள.) எப்பொழுதும் உழுவோர்கள பதம்பார்த்து அறுத்துஅரிக
ளைச்சுமையாகவாரித தேவேந்திரனுலகத்தோடெண்டைசெயய எருந்த
மலையென்று சொல்லுமபடியாகப்போர்போட்டுஆகாயவழியாகவருகிற
சூரியனுடைய குதிரைகள்போலும்,கடாக்களைவிட்டுஅடிததுவைகளை
வித்தூற்றி மந்தரகிரிபோலக்குவியல்செய்து சருவமனிதர்களுக்கு
ங் கொடுத்தாலும் நெல்குறையாது மருதநிலததில்-எ-று. (௪௨)

கயலினமென்றுமதத்தியர்தங் கண்ணிழலைக்கண்டுகருங்கயல்வந்தே
றும், அயலிவர்கொடும்புருவநிழலினைக்கணடேசிலையெனறஞ்சிமீளும
யலுநவுமாவதனந்தாமரைப்போதெனமருவி வண்டுசேரும, இயலும
வர்நாசிநிழல் சண்பகப்போதெனவெருவியிரியல்போகும.

(இ-ள )வயலிற்களையெடுக்கிற பள்ளததிகளுடைய கண்ணிழலைக்க
ண்டு சேற்கண்டைகள் நமமினமென்றுவந்துசேரும், பின்புஅருகில
அவர்களுடைய புருவநிழலைப்பார்தது வில்லென்றுபயப்பட்டோடும்ஆ
சையைக்கொடுக்கிற அவர்களுடையமுகத்தைதத்தாமரைப்பூவென்று நி
னைததுவண்டுகள்வந்துசேரும-அதன்பின்பு அவர்களுடைய நாசியினி
ழலைப்பார்த்துச் சண்பகப்பூவென்று ஓடிப்போகும்-எ-று. (௪௩)

பெரும்பழனத்துழத்தியர்தங்கணைககாலை வராலெனப்போய்ப் பி
டித்துப்பள்ளர், திருமபவுமங்கவர்புறவகால் கமடமெனப்பிடி மருகத
திணைகடோறும், குரும்பையெனுமுலைச்சியர்கண்முகததினுககும் விழி
யினுக்குக்குலைந்தோமென்று சுரும்பினுடன்கலுழவன போறருமலர
யுங் குவளையுந்தேன் சொரியுமாதோ.

(இ-ள.)பெரியவயல்களிற களையெடுக்கிற பள்ளத்திகளுடையகணை
க்காலை வரால்மீனென்று பள்ளர்பிடிதது வெட்கததையடைந்துமறுபடி
யும அவர்ப்பெண்களுடைய புறங்காலை ஆமையென்றுபிடிககு மருதநி
லந்தோறுமதென்னங்குரும்பைபோன்றமுலைகளையுடைய பெண்களது
முகத்திறகும், கண்ணுக்குந்தோற்றுப்போனோமென்று வண்டுடனே
சொல்லியழுகிறதுபோல்தாமரைப்பூவும,நீலோற்பலமும்,தேனைச்சொ
ரியும்-எ-று. (௪௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மழலையுஞ்சுளிக்குமேதி நெடும்புனல்குடையவன்ன
மழலைவண்டானத்தோடு மருதவண்டானத்தோடு
மழலவிரமணிப்பூண்பள்ள ரரிகிணைக்கியையவூதுங்
குழலிசையறுகான்மாதர் குழலிசையறுகாற்கூட்டம்.

(இ-ள்.) எருமைகீரிலேபோய் விழுந்துகலக்க அன்னம் இளமையா
கிய நாரையுடனே மருதநிலததில் வளம்பொருந்திய தானத்தையுடைய
சோலையில்அடும் பிரகாசம்பொருந்திய இரத்தினாபரணங்களையுடைய பள்
ளர்கள் அடிக்கின்ற அரிகிணையென்னும்வாத்தியத்திற்கு இசையும்படி
யாகஊதுகின்ற புல்லாங்குழலிசை இல்லாதபோது பெண்களுடைய
கூந்தலிற்பொருந்திய வண்டுகள் இசையும்படியாகவூதும்-எ-று. (௪௫)

மூசுவண்டிணங்களெல்லா மூடிந்தசங்கிலிகளாகக்
காசுநெற்கதிர்களெல்லாங் கன்னசாமரைகளாட்டத்
தேசுவாய்க்கவளம்பெற்றுஞ் சேறுகப்பாகைச்சிந்தி
வாசவன்களிறுபோலமருதம்வீற்றிருந்தமாதோ.

(இ-ள்.) ஒழுங்காய்மொய்த்துக்கொண்டிருக்கிற வண்டுகூட்டங்கள் சங்கிலியாகவும், இரதம்போலுநெற்கதிர்கள்சாமரைபோன்றது [illegible] பிரகாசம்பொருந்த வளப்பம்பெற்றெனகிறபொருளைச்சிலேடை [illegible] கொடுக்கும்-அழகியவாயினாலே கவளம்பெறுதலாலும், பருவங்கொண்டதேனாகிய அமிர்தத்தைச்சிந்தியென்னும் பொருளைக்கொடுக்கும் தேறித தன்கண்ணிருக்கின்றபாகனைத் தள்ளிக்கொள்ளுதலாலும், தேவேந்திரனேறுகின்ற ஆயிராவதமென்னும் யானைபோல மருதநிலம் வீற்றிருந்தது-எ-று. (௬௬)

தேசுவாய்க்கவளம்பெற்று என்றதைப் பிரகாசம்பொருந்தவளப்பங்களைப்பெற்று என்றுமயானைக்குப்பிரகாசத்தையுடைய கவளம்பெற்று எனப்பொருளகொள்க-தேறுகட்பாகைசிந்தி என்றதை சிறந்ததேனாகிய அமிர்தத்தைச்சிந்தியென்றுகொண்டு யானைக்கு தேறிதன் கண்ணிருக்கின்ற பாகனைத்தள்ளியென்றுகொள்க.

தரவு- கொச்சகக்கலிப்பா.

பண்ணூர்கமலப் பழனப்பதிநீங்கி
மண்ணோடாபோற்றும வடவீதியிற்குறுகி
யண்ணுமலையா னடிக்கமலஞ்சென்றுதொழு
விண்ணூர்கொடிநெடுந்தேர் வீதிகளினமேவினாள்.

(இ-ள்.) வண்டுகளிசைபாடாநின்ற தாமரைப்புஷ்பங்களையுடையமருதநிலத்தாலாவி டுநீங்கிப் பூலோகத்தாரவணங்குகின்ற வடக்குவீதியிலெழுந்தருளி அருணாசலேசருடைய பாதாரவிந்தத்தைத்தொழவண்ணங்க ஆகாயத்தையளாவியகொடிகளையுடைய தேர்களோடுகூடினகுங்கு வீதியிலவந்தாள் பார்வதி-எ-று. (௬௭)

கலி விருத்தம்.

உச்சகோபுரத் துச்சிமேவிலோர்
வெச்சிரத்தினன் மதியின்மாசுபோம்
பச்சமாமணிச் செம்மையால்தினன்
பச்சைமாவெலாம் பவளமாகுமே.

இ-ள்.யாவரும்விரும்பப்பட்டகோபுரத்தினுச்சிகாக்கினாறில்சந்திரன்வரும்போது அக்கோபுரத்திலிழைக்கப்பட்டிருக்கிறவுப்பற்ற வச்சிரங்களினாலே தனதுகளங்கத்தை நீங்குவான் இன்னும் அக்கோபுரத்திலிழைத்திராநின்றமாணிக்கங்களுடையசிவந்தவொளியினால் அதனருகில்வரும்போது சூரியன் இரதத்திற்கட்டியபச்சைக்குதிரைகளெல்லாம்பவளக்குதிரைகளாகத்தோன்றும்-எ-று. (௬௮)

வேற்றுமேறுசேர் மேடைமீதினும்
போற்றுகார்மதிற் புரிசைமீதினும்

தோற்றுநீலமா மணியின்சோதியா
லேற்றவானகமியாழுனையானதே.

(இ-ள்.) வேறுவேறாகி மேருவையொத்தமேடைகள்மேலும், மேகங்கள்சஞ்சரிக்கின்ற மதில்கள்மேலும், இழைத்திருக்கின்ற நீலரத்தினத்தினுடைய பிரகாசத்தினாலே ஆகாயத்திலிருக்கின்ற கங்கையானது யமுனைபோல் கறுப்புநிறத்தையடைந்தது-எ-று. (௪௯)

பாவையாமெனப் பணைமுழங்கவேயரிவைமாதரா
ரடரங்கின்மேல், விரவுபச்சையின்கதிரைவெய்யவன்
புரவிகொளவிழைய புலலென்றுன்னியே.

(இ-ள்) சமுத்திரம்போல வாத்தியங்கள்முழங்கப்பெண்கள்நாட்டியஞ்செய்கின்ற மேலுப்பரிகையிலிழைத்திருக்கின்றபச்சைரத்தினங்களுடையகிரணங்களைப் புல்லென்றெண்ணித்துச்சூரியன் இரதத்திற்கட்டியபசகுதிரைகளேழுங்கொளவும்-எ-று. (௫௰)

தரவு- கொச்சகக்கலிப்பா.

அத்தகையவீதி கடந்துமணியாலஞ்சேர்
உத்தமனையென்னை யாளுடையானைச்சோணகிரி
வித்தகனைக்கண்டு பணிந்துருகிமீண்டுபல
சத்திகளதமமோடு தலைச்சாலைதமேவினாள்.

(இ-ள்.) அப்படிப்பட்டதன்மையையுடையவீதியைத்தாண்டி அழகுபொருந்தியகோயிலுக்குள்போய் உத்தமனை என்னை யாட்கொண்டவனை அருணாசலத்திலிருக்கின்ற ஞானசொரூபனைத் தரிசித்துநமஸ்கரித்து உருகத்தையடைந்து திரும்பிப்பலசத்திகளுடனே தலைச்சாலையென்கிற மலைச்சாலையடைந்தாள் அம்மன்-எ-று. (௫௧)

ஊசியிலோர்கால்விரலையூன்றியொருகான்மடித்து
நாசியிசைவிழிகளையு நாட்டியமுண்டூட்டித
தேசினொழுகுமுதக தெள்ளமுதையுண்டுதவ
கோசிகனைப்போலவுயல்வார் * நேசோடிகோடியே.

(இ-ள்.) ஊசியிலேஒருகாலினுடைய விரலையூன்றி மற்றொருகாலைமடித்துமூக்குநுனியிலே கண்களைச்சேர்த்துப் பதினாறுகலையுள்ள திப்பிரகாசமான அமிர்தகாரணைசெய்துபிரமரந்திரத்தின்வழியொழுகின்ற அமிர்தத்தைச்சாப்பிட்டு விஸ்வாமித்திரன்போலத் தவஞ்செய்வார் அநேகங்கோடிபேர்—எ-று. (௫௨)

நாடுமலமூன்றகற்றி நல்வினையுந்தீவினையுஞ்
சாடிமனமிறந்து தானிறந்துதன்மயமாம்
வீடுபெறவிரும்பி வேட்கையிறிதில்லாமற்
கூடுமெஞ்ஞானியர்கள் கோடானகோடியே

(இ-ள்.) ஆணவமாகிய மாயையென்கிறமும்மலங்களையும் நீக்கி நல்வினை தீவினையென்னும் புண்ணியபாவமென்பது இறந்துபோகக்கெட்டுஉலகத்தில் சிவசொரூபமாயமோட்சம்பெறும்படியாக ஆசைகொண்டு மற்றோராசையுமின்றிச்சிவஞானம்பெற்ற ஞானிகள்கோடிபேர்கள் அந்தமலைச்சாரலில் இருப்பார்கள்—எ-று. (௫௩)

---

* கோடானுகோடியெனப்படும் - கிராமியவழக்குச்சொல்.

னே பார்வதியிருக்கிற இடத்தையடைந்து எதிரேகண்டு பத்தியாகிய வலையிலே அகப்பட்டுக்கொள்ளுகிற பார்வதியினுடைய பாதத்தில்வி ழுந்து நமஸ்கரித்தார்கள்-எ-று ௬௩

நின்னிலைமைகன்னியிறை நீள்பிரமசாரி
என்னுமுறையன்றுமுத லின்றுவரையெல்லா
முன்னிடையுதித்துல குயிர்த்தொகைக்கெல்லா
மன்னையெனுமுன்பெருமை யாரறியவல்லார்

(இ-ள்) தாயேநீயோகன்னிகைசுவ மியோநித்தியபிரமசாரியென்று சிருஷ்டிதொடங்கி இதுவரைக்குமவேதங்களெல்லாஞ் சொல்லிக்கொ ண்டிருக்கின்றதுகளு அப்படியிருக்க உன்னிடத்தில் உலகங்களிலிரு க்கின்ற எல்லாவுயிர்களுந்தோன்றித்தாயென்றுசொல்லும் அப்படிப் உன்பெருமையை ஆரறியப்போகிறார்கள் எ-று ௬௪

நித்தனைமுதற்றருவை நித்தனிடத்தே
சத்தியெனநீவருவை சத்திசிவமென்றே
இத்தகைமைகொண்டுயிர்கள் யாவையுமளிப்பா
யத்துவிதமாகுமுனை யாரறியவல்லார்

(இ-ள்) நித்தியமாகவிருக்கிற சிவனை முதலில் உண்டாக்குவாய் அந் தசிவனிடத்திலே சத்தியாகவருவாய் சத்திசிவமென்கிற தன்மை யாகக்கொண்டு உயிர்களையெல்லாம்பெறுவாய் அத்துவித சொரூபமா கிய உன்னையாரறியப்போகிறார்கள்-எ-று ௬௫

மெய்ப்பொருண்மகேசனரன் வேதனரியானால்
மைப்பருமகேசியுமை வாணிதிருவாவை
இப்படியுமன்றியவ னெப்படியெடுத்தா
னப்படியுமாவையுனை யாரறியவல்லார்

(இ-ள்) பரமசிவனானவர் மகேஸ்வரர் உருத்திரர் - பிரமா-விஷ்ணு ஆனால் நீ மகேஸ்வரி-உருத்திரி-சரஸ்வதி-லட்சுமியாகிய சத்திகளாய் இப்படியுமல்லாமல் அந்தச்சிவன் எப்படிப்பட்ட உருவங்கொண்டா ரோ அதற்குத்தகுந்த உருவங்கொள்வாய் உன்பெருமையை ஆரறியவ ல்லவர்கள்-எ-று ௬௬

நெஞ்சுருகிமாதவர்க ணின்றிவைபுகழ்ந்தார்
வஞ்சியிடைகோதமனும் வந்தனன்வரும்போ
தஞ்சலிபுரிந்தன னதற்குமுனமேமின்
கஞ்சமலரன்னவிரு கால்களில்விழுந்தான்

(இ-ள்)மகாதவத்தையுடையரிஷிகளெல்லாம் நெஞ்சமுருகி நின்று இப்படிஸ்தோத்திரஞ்செய்தார்கள் அந்தச்சமயத்தில் பார்வதி சமீபத்தி ல் கௌதமர்வரும்போதே இரண்டுகைகளையுந் தலையிலேவைத்துச்சூ டபிந்தாமரைமலரையொத்த அம்மனது இரண்டு பாதத்திலும் நமஸ்க ரித்தான்-எ-று

அன்பினுயர்கோதமனு மன்னையையிறைஞ்சி
பின்புறவரைப்பனைய னெண்டிசைபரப்போர்

தன்சிரமிதிக்கரிய தாளிணைகளின்றென்
புன்றுடிமிதிக்கவென புண்ணியமுடித்தேன்

(இ-ள்) பகதியினாலேஉயர்ந்த கௌதமரிஷியும்பார்வதியம்மனைவணங்கிச்சொல்வான் பிரமா அஷ்டதிக்குப்பாலகா சிரசிலேவைத்தற்கு அருமையான பாதமிரண்டு மடியேனுடைய புன்மைபொருந்திய சிரசின்மேல்மிதிக்க என்னபுண்ணியம் செய்தேனை-எ-று ௬அ

இந்தமொழிசொற்றலு மிளங்கொடியுமவேலன்
றந்திமிடைசென்றிடவணங்கதுதவிர்ந்தால்
சிந்தைமகிழுன்னிடையில் வந்துகுறைதீர்வேன்
மைந்தவெனவோதினள் மறுத்துமிவைசொல்வாள்

(இ-ள்) இந்தவார்த்தையைச்சொன்ன அளவில் இளமையாகியகொடிபோன்ற அம்மையும், பிள்ளையாகிய கௌதமனே எனக்கோர் குறைவந்தால் சுப்பிரமணியனிடத்திலும் கணபதியிடத்திலுஞ் சென்று தீர்த்துக்கொள்வேன் அவ்விடம்விட்டால் என்பேரில் அன்புவைத்த உன்னிடத்தில்வந்து தீர்த்துக்கொள்வேனென்று சொல்லி மறுபடியுஞ்சொல்வாள்-எ-று ௬௯

நாயகன்மொழிந்திட நடந்தபடியெல்லாம்
பாயிரமெனும்படி பகர்ந்தனளெவர்க்குந்
தாயிவைமொழிந்தளவினிற்சதமகற்கன்
றாயிரம்விழிதந்தருளித்தமுனிசொல்வான்

(இ-ள்) பரமசிவனவர் சொன்னபடி பூமியில்வந்து தானடந்தசமாசாரமெல்லாம பாயிரத்தோடேகூடிய நூல்போல முறையாகவிரித்து எலருக்குந்தாயாகிய பார்வதிசொன்னபோது முன்காலத்தில் தேவேந்திரனுக்கு ஆயிரங்கண்ணுண்டாகச் செய்த கௌதமர்சொல்வார் என்றவாறு ௭௰

இத்தலமுதற்றலமிதன்பெயர்தலேச்ச
மூத்தமயிதிற்றரு மொன்றுபலவாகும்
மெய்த்தவமியற்றியிடில் வெள்விடையின்மேல்வந்
தத்தனுமிடப்புற மளித்தருளுமென்றார்

(இ-ள்) இத்தஸ்தலம் முதன்மையானஸ்தலம் இதனுடையபேர் தலேச்சுரம் இதுமிகவு மூத்தமமானது இதில் ஒருபுண்ணியத்தைச்செய்தால் ஒன்றுபலவாய் விருத்தியாகும் இதிலிருந்து கொண்டு நீமெய்மையாகிய தவசுசெய்தால் வெண்மைபொருந்திய ரிஷப வாகனத்தின் மேலெழுந்தருளிப்பரமசிவன் உனக்குஇடப்பாகங்கொடுப்பாரென்றார் கௌதமர்-எ-று ௭௧

மாலயன்வசுக்கண் மகவான்முனிகணத்தோர்
சாலவுள்சமைத்ததில் தனித்தவமுடித்தார்
காலமிடகன்றுசெயல் கைப்பலமிதென்றான்
மூலமுதல்வல்லியு முடிப்பணிதுவென்றாள்

(இ-ள்) வாராய்அம்மையே விஷ்ணுபிரமா அஷ்டவசுக்கள் தேவேந்திரன் அனேகமுனிவர்கள் அவரவர்கள் இடஞ்செய்துகொண்டு ஒப்பற்றதவஞ்செய்து நினைத்தகாரிய முடித்துக் கொண்டார்கள் நீவந்த

காலமு மிட முநன்மையாகும் இவ்விடத்தில் நீதவஞ்செய்தால்கைப்ப
லமாகி முடியுமென்று கௌதமர்சொல்ல எல்லாப்பொருளுக்கு மூல
மாகிய அம்மனும்தவசுசெய்து என்கருத்தைமுடித்துக்கொள்ளுகிறே
னென்றாள்-எ-று ௭௨

எண்சீரடிஆசிரியவிருத்தம்

கோதமனேமுதலாய முனிவர்க்கெல்லாங் குளிர்ந்தமொழி பு
ந்துவிடை கொடுத்துச்சோணை, பூசாமாமதன் குணபாற்பன்னசாலை
நிதமைப்பித்தகமகிழ்ந்து புறம்புகாக்க, மாதரொழு வயிரவமைத்து நா
லுபாலின் வாயிலையெண் வயிரவர்கண் மகிழ்ந்துகாக்க, வாதாவினிரு
த்திமைந்தர் மருங்குகாக்க வந்தரியுட்புறங்காக்க வமைத்தாள்மன்னோ

(இ-ள்) கௌதமாமுதலான முனிவர்க்கெல்லாம் பிரியவசனஞ்சொ
ல்லி உத்தரவுகொடுத்து அருணாசலத்துக்குக் கிழக்குப்பக்கத்தில்பன்
னசாலை புதிதாகச்செய்வித்து சத்தமாதர்களைப் புறக் காவலாகவைத்
து நான்குவாசலையும் எட்டுவயிரவர்களைக்காக்கவும் விநாயகர் சுப்பிரம
ணியா தன் இரண்டுபக்கமுங்காக்கவும் துர்க்கை உட்பக்கங் காக்கவுஞ்
செய்தாள் பார்வதி-எ-று ௭௩

கொந்தளகஞ்சடை பிடித்துவிரித்துப்பொற்றோட் குழைகழுத்தி
ற்கண்டிகையின் குப்பைபூட்டி, யுந்துமாவுரிநிகர்பட்டாடை நீக்கியுரித்
தமாவுரிசாத்தியுத்தூளத்தால், விந்தைதிருநீறணிந்து கனற்குட்காய்ந்
துவிளங்குமூசியிலொருகால்விரலையூன்றி, அந்திபகலிறைபதத்தின் ம
னதையூன்றியரியபெருந்தவம்புரிந்தா ளகிலமீன்றாள்

(இ-ள்) புஷ்பங்களைத்தரிக்கின்ற கூந்தலைச் சடைசெய்து விரித்துத்
தோள்கழுத்து காதுகளில் ருத்திராட்ச மாலைகளைத்தரித்து ஆடுகின்ற
பாமபுரிபோலிருக்கிற பட்டாடை யுடுத்துகிறதுவிட்டு மாவுரிதரித்து
செயதலைக்கொடுக்கின்ற விபூதியைச் சருவாங்கமுந்தரித்து நெருப்பி
ல்காய்ந்து பளபளவென்று பிரகாசிக்கும ஊசியில் ஒருகாற் பெருவிர
லையூன்றிக்கொண்டு இராப்பகல் மனதிலே பரமசிவனைத் தியானமா
கநிறுத்தி அரிதாகிய பெரியதவத்தைச்செய்தாள் உலகத்தைப்பெற்ற
பார்வதியம்மன்-எ-று ௭௪

இளைத்தகொடி மருங்குவளைந் தெரியினூப்ப ணினியதவ மியற்று
தலைகண்டிளைத்துவாடிக், களைத்துமனந்துடித்துவிழி புதைத்துவாணி
கண்ணீரின் மூழ்கினின்றாள் கமலத்தாளு, மூளைத்துமனந் தளர்ந்த
ழுதுவிழுந்தாண்மற்றை யுயிர்களெல்லாங்கரைந்துகரைந்துருகாநின்ற,
வளைத்துவளைத்துரைப்பதென்றாய் வருந்துமானால் வயிற்றிலுள்ள க
ருப்பமெல்லாம் வருந்திடாதோ

(இ-ள்) மிகவுஞ்சிறிதாகிய கொடிபோன்ற இடையானது வளைந்து
அக்கினிமத்தியிலே இனிமையான தவத்தைச்செய்கிறதைப் பார்த்துப்
பார்த்து இளைத்துவாட்டத்தையடைந்து களைத்துமனது துடித்து இர
ண்டுகண்களையு மூடிக்கொண்டு சரஸ்வதியானவள் கண்ணீரால்முழு
கினாள் இலட்சுமியானவள் மனதுவருந்திச் சஞ்சலப்பட்டு அழுது
விழுந்தாள் மற்றசீவராசிகளெல்லாம் மனங்கரைந்து உருகியதுகள் கா
விதைப்பிரித்துச் சொல்வதினால் என்னபயன் தாயானவள் வருந்து

வாளாயின் வயிற்றிலுள்ளகருவாகிய சீவனெல்லாம் வருத்தத்தை யடையாதோ-எ-று ௭௫

முன்பனியிற்கருகுபடாக்கமலம்போல முகநதோன்றப் பனிகய த்துண் மூழ்கிநிற்கும, பின்பனியிலதிசீதவிடத்திற்சேரும்பெருமழை க்குணமீனென்னப் பேணிநிறகும், அன்பனிடம் பெறுமளவு மிது ஞால் வேண்டு மரியதவமபுரிந்தனளவவிடத்துவேந்தன், வன்பனி யுறுயினை மேமான்முதலாந் தேவர்மறைபுகுந்ததவச சாலை மருங்கிற் சார்ந்தார்

(இ-ள்) முன்பனிக்காலத்திலே கருகிப்போகாத தாமரைப்பூப்போ லமுகமாத்திரந்தெரியக்குளிரசசியெபாருந்திய தடாகங்களிலே நின்றும் பின்பனிககாலததிலே அதிகசீதளம்பொருந்திய இடத்திலேயிருந்துமழைபெயகிறபோது அதில் ஒருமீன்போலச்சஞ்சலப்படாது நின்றும் பரமசிவன் இடப்பாகததைப் பெறுகிறவரைக்கு மிதுபோலவேண்டியதவததைசசெய்தாள் அததவிடத்தில் பிரமதேவனும வலிய சர்ப்பததில நித்திரைசெய்கின்ற விஷ்ணுமுதலாகிய தேவர்களும் தேவகோஷ்டம்பொருந்திய தவச்சாலையைவந்து அடைந்தார்கள்-எ-று ௭௬

அந்தரியுமாயவனுா முதலாந்தேவ ரனைவருக்கு முபசார மளித் துநீங்கள், வந்தவாவியம்புமென மகிடனாலேவருந்தியதுந் தளர்ந்ததுவும் வகுத்துச்செ ன்னா, சுந்தரியுங்குமரியுடன் சுடரும்வாளாற்றொடுகளததின் மகிடனுாகதொலைப்பாயென்றாள், விரதையதுபுரிவனெனப் பணிந்தாளன்னை விளம்புதல்கண் டகமகிழ்ந்து விடைகொண்டாரே

(இ-ள்) பார்வதியானவள் விஷ்ணுமுதலான தேவர்களெல்லாருக்குமுபசாரஞ்சொல்லி நீங்களிவ்விடததிறகுவந்தவகைசொல்லுங்களென்றுகேட்க அவர்கள் மகிடாசுரனாலே தாங்கள்துன்பப்பட்டுத் தளாச்சியடைந்தவகை விபரமாகச்சொன்னார்கள் அதற்குப்பார்வதியானவள் துர்க்கையைக்கூப்பிட்டு நீகததியினாலே யுததகளததிலே மகிடாசுரனவல்லமைகெடக் கொன்றுவிடென்றுசொன்னாள் அதற்குத் துர்க்கை அப்படியே செய்வேனென்றுபணிந்தாள்தாயாகியபார்வதி இந்தவார்ததையைசசொன்னஅளவில் விஷ்ணுமுதலானவர்கள் சநதோஷத்தையடைந்து வணஙகி விடைபெற்றுககொண்டார்கள் எ-று ௭௭

கலிவிருத்தம்

கோதமாச்சிரமந் தனிற்கோல்வலை
தீதில்தததவஞ் செயததுசெப்பினேன்
மேதிமாமுகற் காய்ததும்வெள்விடைச்
சோதிபாகமடைநததுஞ்சொல்லுவேன்

(இ-ள்) சத்திதேவியானவள் கௌதமருடைய ஆசிரமத்தில் குறைவில்லாத தவததைசசெய்ததுசொன்னேன் பிறயாடு மகிடாசுரனைக் கொன்றதும், ரிஷபவாகனத்தையுடைய சிவனுடையஇடப்பாகததைப்பார்வதியார் அடைந்ததுஞ்சொலவேன்-எ-று ௭௮

நான்காவது-திருககண்புதைத்தசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩௩௨.




உ

சிவமயம்.

ஐந்தாவது

பார்வதியார்

# இடப்பாகம்பெற்றசருக்கம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

அஞ்சனக்கிரியில்வாழு மசுரன்றுனர்க்குந்தீ
னஞ்சமேயனையானந்த நமனுக்குநமனுயவந்தோன்
செஞ்சிகையெரியைததியக்கும் தீமையானளகைநாட்டின்
விஞைசயான்வருந்தவுள்ள வளமெலாமகவாந்தவீரன்

(இ-ள்) நீலகிரியில் வாசஞ்செய்துகொண்டிருககிற அசுரனுனவன் எல்லாரிலும அதிகபராககிரமத்தையுடையவன் விஷததினுககுச்சமானமானவன் அந்தயமனுக்கும யமனுனவன்சிவபபாகிமேலெயெழுகினற கொழுந்தையுடைய நெருப்பைசசுடத்தகுநத தீமையையுடையவன் அளகாபுரியில குபேரன் தரித்திரதஜையடைய அங்கேயிருககிறவளங்களெல்லாங் கொள்ளையிட்டவன்-எ-று

தாமரைக்கண்ணன்றங்கு மாவினைத்தலைவால்கூட்டி
மாமணிக்கவண்போற்கொள்வன் வாரணிவாகனத்தைவாங்கி
வேமழற்குஞ்சிமைந்தர்க் குதவுவன் விமானத்தோடே
சோமனைப்பிடித்துக்கையாற் பிழிந்துமுன்சுருந்துஞ்சூரன்

(இ-ள்) விஷ்ணுவிற்கிரைசெய்கின்ற ஆதிசேடனைத்தலையையும், வாலையும் ஒருகையினாலே சேர்த்துப்பிடித்து அதன் சிரமணியைக் கவணிற்கல்லாகவெறிந்து விளையாடுவான் அக்கினியைச்சொறிவிட்டு அவனேறுகின்ற ஆட்டை நெருப்பைப்போலச் சிவப்புமயிரையுடைய தன்பிள்ளைகளுக்கு ஏறக்கொடுப்பான் சந்திரனை அவனேறுகிற விமானத்தோடே கையினாலே பிடித்துப்பிழிந்து அவனுடம்பிலிருந்துவருகிற தேவாமிர்தத்தைப்பானம்பண்ணுகிறசூரன்-எ-று ௨

கருதியமகவான்வெள்ளைக் களிற்றின்மேற்றிரிவன்பின்னைப்
பரிதிதேர்த்தனிப்பசுமைப் பரிசெலப்பவனிபோவா
னிருதியைச்சுமக்குமாளி யேறுவனிணங்கின்மூழ்கிக்
குருதிகொப்பளிக்கும் வாளோ னெடுத்துயிரனைத்துங்கொல்வான்

(இ-ள்) உயர்வாக நினைக்கப்பட்ட தேவேந்திரனுடைய வெள்ளையானைமேல் திருவோலக்கம்வருவான் சூரியனுடைய தேரிலேறிக்கொண்டு பச்சைக்குதிரைகளேழும் நடக்கப் பவனியாகப்போவான் நிருதியைச் சுமக்கின்ற ஆளியின்மேலேறிக்கொள்வான் நிணங்களாலே மூழ்கப்பட்டு இரத்தங்களைக்கொப்பளிக்கும் ஒருவாளாயுதமெடுத்து சருவத்திரசீவன்களையும் கொல்வான்-எ-று ௩

அன்னவன்மகிடமான வாற்றினலங்கிக்காலத்
தென்னவன்மகிடமேறான் காலினுற்றிரிந்தானென்றா
லென்னவன்கொடுமைநம்மா லியம்பலாமிலகுஞ்சோதி
மன்னவன்கிரியைச்சாய்த்தான் மீனுக்காவாரிதூர்த்தான்

(இ-ள்) அப்படிப்பட்ட அசுரன் எருமைமாட்டுமுகத்தையுடையவனானபடியினாலே தெற்குத்திக்கிலிருக்கின்ற யமனுடைய எருமைக்கடாவின்மேலேறமாட்டான் காலினால்நடந்து திரிந்தானென்றால் அந்த மகிடாசுரனுடைய கொடுமை நம்மாலெப்படிச்சொல்லக்கூடும் சோதிசொரூபமாகிய சிவனிருக்கிற கைலாயத்தையுஞ் சாய்த்தான் மீன் வேண்டியதற்காகச் சமுத்திரத்தையுந் தூர்த்தான்-எ-று ௪

மயனெனுந்தச்சன்செய்த மகிடமாபுரத்திலன்னோ
னயனறுகரிசிலத்த விருக்குநாளவனுக்காய
பயனுறுநுகர்ச்சிவேண்டி யாயிரம்படைக்கையாளர்
கயமுதல்விலங்கைநாடி வேட்டையாகக்கானிற்சென்றார்

(இ-ள்) மயனென்கிற தேவதச்சனால் இரத்தினகசிதமாகச் செய்யப்பட்ட மகிடபுரத்தில் அந்த அசுரன் பிரமாவானவர் நித்தியம் அறுகும் அட்சதையுங்கொடுக்க வாழ்த்துக்கொண்டிருக்கிறநாளில் அந்த அசுரன் தின்னுகிற மாமிசத்துக்காக ஆயுதபாணிகளாகிய ஆயிரம் பேர்கள் யானைமுதலாகிய மிருகங்களைத்தேடி வேட்டைமார்க்கமாகக் காட்டுக்குப்போனார்கள்-எ-று ௫

அறுசீரடியாசிரியவிருத்தம்-வேற்றுவண்ணம்

எழுந்தவனுமாகதநேர் துரககமாயிரம்பூண்டவிரதமேறி,வழிந்த கரிமதக்கடலை யெழுந்ததுகளடக்கவுமை வனத்திற்சென்றான், கொழுந்துவிடுகனலனையாாவரவுகண்டுபலகோடி குன்றம்விசிர,தழைந்த ரீடாதுத் தாக்கணங்குநோக்கணங்கும் பொருதெதிரே தடுத்தாரன்றே.

இ-ள் இங்கப்பிரகாரம் நிதும்பாசுரன் பச்சைக்குதிரை ஆயிரங்கட்டியதேரிலேறிக்கொண்டு அப்பொழுது எழும்பிய சிறுஅணுக்கள் முன்போகாநின்ற யானைகளின்மதஜலம் சமுத்திரமாகத் தேங்கியிருப்பதைவறச்செய்ய பார்வதிதவஞ்செய்யும் வனத்திற்குப்போனான் கொழுந்துவிட்டெரியும் நெருப்பொத்த அசுரப்படைகள்அநேகமலைகள்விட்டெறிய இவர்கள்வருகிறதுகண்டு அம்மனிடத்திலிருக்கிற தாக்கணங்கு நோக்கணங்கு என்னுமிருவரும் ஆயுதபாணிகளாகப்போய எதிரேதடுத்தார்கள்-எ-று ௰

சண்டனுருக்கிரன்சோமன் கபாலிகர்சங்கரன் கோதண்டன் வீத, ஒண்டரியசித்திராங் கதனென்னும்வயிரவர்களிருநால்வோரு, மண்டமுகடுடையாகத் தானைகளைத்தொலைத்திட்டவரிகளைபோலக், கண்டகனுஞ்சாரதியுந் தேருமன்றிச சேனையெல்லாங் கணத்திற்சாய்த்தார்.

(இ-ள்)சண்டன்ருத்திரன்சோமன் கபாலிதனக்குத்தானே ஒத்தசங்கார கோதண்டன் வீதன் சித்திராங்கதன்இவ்வெட்டுயிரவர்களும் அண்டகோளமுடைபட யானைகளைக்கொல்லுகிற சிங்கள்போலகாசிதுநிதும்பாசுரனும் அவன்சாரதியும்தேருந்தவிரமற்றச்சேனைகளையெல்லாம நொடிப்பொழுதிலே கொன்றார்கள். ௧௧

அட்டவயிரவர்படையா லணங்குகளாற்றனது படையழிதலைக்கி,வட்டநெடுந்தேர் முடுக்கித் தாக்கணங்கின் முகத்திலெண்ணிலவாளிகோதகான், விட்டகணைகளைவிலக்கித் தேரோட்டுஞ்சாரதியை வீழ்த்திவாளி, தொட்டகாங்களைப்பிடுங்கி யவனுயிரைக்குடித்தந்தச்சூரமாது.

(இ-ள்)எட்டுவயிரவர்களுடைய ஆயுதங்களினாலும் இரண்டுபெண்களாலும் தன்னுடையபடைமுழுவதும் இறந்துபோகின்றதைப்பார்த்து நிதும்பாசுரன் வட்டமாகிய நெடியதேரைவிட்டுக் கொண்டு தாக்கணங்கென்பவளுடைய முகத்திலேகணக்கில்லாத பாணங்களைவிட்டான் அந்தபாணங்களைவிலக்கித்தேர்நடத்துகிறசாரதியைகொன்று அம்புதொடுத்தகைகளையறுத்து அவனுடையதலையையும் அறுத்துக் கொன்றாள் தாக்கணங்கு-எ-று ௧௨

ஓடினசெங்குருதிநதியுடலிழந்துவிழுமவுணருயிர்கள் போல,வாடினவெண்குறைத்தலைக ளனுதினமுமருந்துகின்ற வலகைபோலச்.குடினர்கள்வயிரவருந் தாக்கணங்கு நோக்கணங்கும் அம்பைவாகை,வீடினர்க ளவுணரென மகிடமுகற் குரைத்தனர்போயவிரைந்துதூதர்.

(இ-ள்.) வயிரவர்களாலும் இந்த இரண்டுபெண்களாலும் தேகமறு பட்டுச்சிகரிக்கிறபோது மகாசுரருயிர்போல் இரத்தநதியானது ஓடியதுமி தயம்மாமிசத்தைத்தின்று கூத்தாடுகிறபேய்போல்கவந்தங்கள் கூத் தாடியதுகளவயிரவர்முதலாகியவர்கள் தம்பைவாகைமாலை சூடிக்கொ ண்டார்கள் அசுரர்களிறந்துபோனார்களென்று மகிடாசுரனுக்குத்தூதர்கள் சீக்கிரத்திற் போய்ச்சொன்னார்கள்—எ-று. (௰

கேட்டளவினை மகிடமுகன் கயிடவன்றன் முகநோக்கிக் கிளத் துவானோர், காட்டிலுறைசிறுபேயுஞ் சணவனுநமபெரும்படையைக் கழி த்ததுவென்றல், நாட்டநுகலயனரியுமனைக இனிமேற்றிறைகொடுக்கவ னுவாரோவ, நீட்டினகைபுரிந்தெழுந்தா னேறினனுயிரங்கரிகுழிரத மீதில்.

(இ-ள்.) மகிடாசுரன் இந்தவார்த்தையைக்கேட்ட அளவில் தன்னரு கிலிருக்குங்கயிடவன் முகத்தைப்பார்த்துச் சொல்வான் ஒருகாட்டிற்சஞ் சரிக்கின்றசிறியபேய்களும் கணங்களும் நம்முடைய பெரியசேனைகளைக் கொன்றதுகளென்றால் சிவன் பிர்மா விஷ்ணு முதலானவர்கள் சொன்ன படி கேட்பார்களோவென்று அதிகமாகியநகைகொண்டு எழுந்திருந்து ஆ யிரம்யானைகளைகட்டியதேரிலேறிக்கொண்டான்—எ-று. (௰௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பதினொருகோடியானைப் பலத்தராய்க்காந்தனீலன்
முதுகரன்குருதியண்டனீசகன்சண்டன்முண்டன்
மதுகயிடவன்றீக்கண்ணன் புகைக்கண்ணன்மாலியென்றும்
தகிகொளாயிரண்டுபேருந் தேர்களைத்தூண்டிச்சென்றார்.

(இ-ள்.) மகிடாசுரன்தேரின்மேலேறினவுடனே பதினொருகோடியானைப் பலத்தையுடையவராகியகாந்தன்-நீலன்-முதுகரன்-குருதி-அண்டன்-நீசன்-சண்டன்-முண்டன்-மதுகயிடவன்-தீக்கண்ணன்-புகைக்கண் ணன்-மாலியென்று-சொல்லப்பட்ட பன்னிருவரும் தங்கள்தங்கள் இரதங் களைநடத்திக்கொண்டுபோனார்—எ-று. (௰௫)

கரிமுகத்தவர்நிவாத கவசர்கள்காலகேயர்
பரிமுகத்தவுணர்மேதிப் பணைமுகத்தவர்கள்பற்றி
எரிமுகத்தவுணர்சீறி யெழுமபுலிமுகத்துக்களவ
ரரிமுகத்தவுணர்வெள்ள மாயிரஞ்சென்றவன்றே.

(இ-ள்.) யானைமுகத்தையுடையவர்கள்-நிவாதகவசர்கள் காலகேயர் கள்-குதிரைமுகத்தையுடையவர்கள் எருமைமாட்டுமுகத்தையுடைய வர்கள் நெருப்பெரிந்துகொண்டிருக்கிறமுகத்தையுடையவர்கள் புலிமுகத் தையுடையவர்கள் சிங்கமுகத்தையுடையவர்களாகிய அசுரர்கூடிய ஆயிர ம்வெள்ளம்நடந்ததுகள்—எ-று. (௰௬)

பாய்பரியதனிற்பாதி பரிகளிற்கரிகள்பாதி
காய்கரியதனிற்பாதி கடும்பரிக்கொடுந்தேர்செல்லப்
பேய்களுங்கொடிகளாடப் பிணங்கிவெண்கொடிகளாட்
வேயகளப்பறைகளார்ப்பக் குறுகிலன்விகதைகானில்,

(இ-ள்.) இப்படி ஆயிரம்வெள்ளங்காலாட்கள் புறப்பட்டவுடனேஐந் நூறுவெள்ளங்குதிரையும்இருநூற்றைம்பதுவெள்ளம்யானையும் நூற்றி ருபத்தைந்துவெள்ளம்தேருமாட்டகப்பேய்களும்காக்கைக்கூட்டமும்விரு ந்தாம்படுமென்றுகளித்துக்கூத்தாட வெள்ளைக்கொடிகளாட்டப்புள்ளா ங்குழல்பேரிகைமுதலானதுகளெழுழங்கமகிடாசுரன் அம்மனிருக்கிறகா ட்டில்வந்துசேர்ந்தான்—எ-று. (௰௭)

அடலவன்வரக்கண்டஞ்சி யடைந்தமைக்கபயமென்று
படருறுமுனிவர்கூற வுமையவள்பயங்கெடுத்து
விடலுடனருகுநின்ற விந்தையைவிரும்பிநோக்கி
கடகமேதாண்மடிவாயென்றாள்விடைகொடுபெயர்ந்தாள்கன்னி

(இ-ள்.) வல்லமைபொருந்தியமகிடாசுரன் வருகிறதைப்பார்த்துபய ப்பட்டுஓடிவந்துபார்வதிக்கு அபயமென்றுமுனிவர்கள் முறையிட்டுச சொல்லஅம்மனானவள் அவர்களுடையபயங்களைத்தீர்த்துத தன்சமீபத தில்நின்றபெருமைபொருந்தியதுர்க்கையைப்பார்த்து உன்னுடையகத் தியினாலேஅந்தஅசுரனைக்கொன்றுவிடென்றுசொல்ல உததரவுபெற்று ப்புறப்பட்டாள்துர்க்கை—எ-று. (௰௮)

ஆளிமேற்கன்னிசெல்ல வருணநாயகிமுன்செல்லக்
காளிதுந்துமிபின்செல்லசுந்தரிகணங்கள்செல்ல
ஞாளிமேல்வடுகாசெல்ல நான்முகிமுதலாமாதர்
தாளிமேற்செல்லத்தங்கள் விடையின்மேற்றாசிசென்றார்.

(இ-ள்.) துர்க்கையானவள் ஆளிவாகனத்திலேறிக்கொண்டுபோகஅ ருணநாயகியென்பவள்முன்னேபோகவும்காளிதுந்துமிஎன்கிற இருவ ரும்பின்னேபோகவும் பார்வதியினதுகணங்களும் சுவானவாகனத்தில் வயிரவர்போகவும்அபிராமிமுதலாகியமாதரெழுவரும்தங்கள் தங்கள்வா கனங்களேறிக்கொண்டு தூசிப்படையாகத் துகளெழும்பப் போனார் கள்—எ-று. (௰௯)

சென்றிதோமரத்திற்குன்றிற் சிலைகளிற்படையிற்கையிற்
கன்றிடமகிடன்சேனைப் பாதியைக்கணத்திற்சாய்த்தார்
வன்றிறன்மகிடன்சேனைத் தலைவருமகிடன்றானுங்
குன்றெனவெதிர்த்துகன்னி படையெலாந்துரத்திக்கொன்றார்.

(இ-ள்.) இப்படிதுர்க்கைசேனைகள்போனவுடனே உலக்கையினாலு ம்மலைகளாலும்வில்முதலாகியஆயுதங்களாலும் கைகளினாலும் கோபத் துடனேபோர்செய்கிறமகிடாசுரனுடையபாதிசேனையை ஒருநொடிப் பொழுதிலேகொன்றுவிட்டார்கள்மகிடாசுரனும் அவனுடையசேனாத தலைவர்களும்மலைபோலஎதிர்த்து துர்க்கையின்சேனைகளையெல்லாந் துர த்திக்கொன்றுவென்றார்கள்—எ-று. (௨௰)

துந்துமிமுதலாநால்வ ரிடைத்தனர்குலியான
சுந்தரிவாராகியோடு முகத்தகடிகிரிக்கையா
ளிகதிரியமறைபாளொன்று மெழுவருமறைந்தார்ஞானி
யுதிரிடைந்தார்கன்னி றந்தளர்ந்தனமேயவென்றான்.

(இ-ள்.) அசுரனதுபடைகளைஎதிர்த்துயுத்தஞ்செய்த அளவில்துர்க்கமி-காளிமதங்கி-சண்டி-என்கிறநான்குசத்திகளுமதோற்றார்கள்-சூலி-நீலகண்டி-வாராகி-சண்முகி-திரிசக்கையாள்-இந்திரையாளென்கிற ஏழுமாதரும்யுத்தஞ்செய்யமாட்டாமற்காட்டிலொளித்தார்கள் சுவாணவாகனத்தையுடையவயிரவர்களுந்தோற்றார்கள் ஆர்க்கையானவள் மனந்தளர்ந்துஉமாதேவியேயென்றுதியானித்துநின்றாள்—எ-று. ([illegible])

உறுதுணையுமையேயென்னும் பொழுதில்யோகினிகள்வானி
லறுபத்துநான்குகோடி யதிர்த்தெழுந்தழலின்மாரி
இறுதியாயருளசசேனை யிடிமழைசொரிகையாலே
குறுகியமகிடன்சேனைத் தலைவருங்கொதித்துச்சென்றார்.

(இ-ள்.) ஆர்க்கையானவள் அம்மனே துணையென்றபோது அறுபத்துநான்குகோடியோகினிகள் ஆகாசத்திலார்ப்பரித்தெழுந்து நெருப்புமழையையும்இடிமழையையும் சொரிந்தபடியினாலே மகிடாசுரனுடைய சேனைகளெரிந்துபோனதுகள் அப்பொழுதுசேனைத்தலைவர்கள்கோபித்துச்சண்டைசெய்தார்கள்—எ-று. (உஉ)

கலிவிருத்தம்.

அருசிகன்றனைச் சென்றனளாரணி
மருவுகாந்தனை மாய்த்தனள்வாரணி
காரனைவென்றனள் வேலுடைக்காரணி
நாகனுருயி ருண்டனளாரணி.

(இ-ள்.) அப்படிமகிடாசுரனுடைய சேனைத்தலைவர்கள் எதிர்த்தவுடனே அபிராமியென்பவள் அருசிகனென்பவனைக்கொன்றாள்வாரணியென்பவள்காந்தனென்பவனைக்கொன்றாள்சண்முகியென்பவள்காரனென்னும் அசுரனைக்கொன்றாள் நாரணிநாகனென்னும் அசுரனைக்கொன்றாள்—எ-று. (உங)

சூலபாணி தொலைத்தனன்மிண்டனைக்
கோலமாமுகி சண்டனைக்கொன்றன
ளாலவூணி மதுவையழித்தன
ணீலனுருயி ரிந்திரைநீங்கினள்.

(இ-ள்.) சூலக்கையாளென்பவள் மிண்டனென்பவனையும் வராகிச் சண்டனென்பவனையும்நீலகண்டிமதுவென்னுமசுரனையும் இந்திரை நீலனென்பவனையுங்கொன்றார்கள்—எ-று. (உச)

துந்துமிக்கொடி சோணிதவூணனை
தந்துமிக்கும் படிக்கதைநாட்டினாள்
நந்துமிக்க நிகர்க்கருணாசலை
வந்துமிக்கெரிக் கண்ணனைவாட்டினாள்.

(இ-ள்.) துந்துமிக்கொடியை யுடையவள்சோணிதவூணனென்பவனைத்தலையறும்படி தண்டாயுதத்தாலடித்தாள்சக்கரத்தைக் கையிலேதரித்த அருணாசலையென்கிறசத்தி அக்கினிக்கண்ணனைக்கொன்றாள்—எ-று.

கயிடவன்புகைக் கண்ணனிருவருஞ்
செயிரின்மாளாச் சிந்தினன்சுந்தரி

வெறிகொண்டவன் விற்கலைமுறித்தன
னுறுபவமயிற் றிலைநுதனைப்போதினாள்
கொற்றவையின் குலங்கள்விடுத்தவ
னெற்றிப்பறகண் ணழலினிமிர்த்ததே.

(இ-ள்) செயங்கொண்டவளாகிய துர்க்கைகையிலிருந்த வில்லையி ண்டாகமுறித்தாள் அந்த வில்லினாலே அசுரனுடைய நெற்றியிலே தாள் அங்கநபலமபொருந்திய அம்புகளைவிட்டவளாகி அந்தமகிடாசு ன்நெற்றியிலேசுவாமியினுடையகண்ணைக்கின்போலசுடுமென்று தாக் கியது—எ-று. (ரு௧)

சாபமெழுநிலை போகத்தரிப்பளோ
கோபமிஞ்சிக கொதித்தெழுகூறறகதிற்
றீபமென்னத திகிரியொன்றேவியே
பாபகாரி தலைவிழப்பண்ணினாள்.

(இ-ள்.) துர்க்கையானவள்வில்லொடிந்ததும்பொறுக்காமல் அதி கோபங்கொண்டுகொதித்தெழும்பாவிநெருப்பைப்போல பிரகாசிக்கின் றசக்கராயுதத்தைவிட்டுப்பாவியாகியமகிடாசுரனுடையதலையறுப்ப டிசெய்தாள்—எ-று. (ரு௨)

கன்னியாழி யெறிடக்கடாமுகம்
சின்னபின்னமாக வாயுஞ்சிதைந்திலன்
முன்னையாதவத் துன்மையினாமுமதம்
றுன்னுமால்தரி யாயெதிர்தோன்றினான்.

(இ-ள்.) துர்க்கையானவள்சக்கராயுததைவிட்டெறிய மகிடாசுர ன்தேகஞ்சின்னபின்னமாகியுஞ்சாகாதவனாகி பூர்வகாலத்திலேசெய்த தபோபலத்தினாலேமும்மதங்களைப்பொழியாநின்றபெரியயானையுருவ மகொண்டெதிராகவந்தெதிர்த்தான்—எ-று. (ரு௩)

ஆளியேறுசென் றங்கவனூசியின்
மூளைவாரி நுகாநதுவெய்யபிரான
மீளவுங்கைதை கொண்டெடுத்தாவீசனுன்
சூளிநாயகி கூர்மைவேலேவினாள்.

(இ-ள்.) அப்படியானையுருவங்கொண்டெதிர்த்தஅளவில் துர்க் கையேறுகின்ற ஆளியானதுபோய அந்தயானையுச்சியிலிருக்கின்ற மூ ளையைக்கையினாலேஅள்ளந்துதோண்டியெடுத்துத்தின்றது அதனாலு யுஞ்சாகாமற் கையினாலேதிருப்பியுந் தண்டாயுதங்கொண்டெதிர்ந்தான் பேய்களுக்கதிகாரியாயிருக்கின்றதுர்க்கைகூர்மைபொருந்திய வேலாயு தத்தைவிட்டாள—எ-று. (ரு௪)

விடந்ததும்பிய வேல்படவெஞ்சமர்க்
கிடந்ததும்பி முகனுமிறந்தனன
னடந்ததும்பிக ளாயிரமாயிரங
குடைந்ததும் பிரபமெனக்குன்றியே.

(இ-ள்.) விஷத்தைக்கக்கிக்கொண்டிருக்கிறவேலாயுதம் பாய்ந்த வுடனேயுத்தத்தில்நின்றயானைமுகன் அதைசகிக்கமாட்டாமல் இறந் துவிட்டான் அநேகமாயிரம்வண்டுகள்குடையவுள்ளேயென்று மிலவு

ம்த்துனேயோடுகூடிய அதஇமாம்போல்—எ-று. (௧௫)

வீழ்ந்தபின்பரி வேடமதாயெதிர்ப்
போர்ந்துவன்கசை கொண்டுபுடைந்தனன்
சோர்ந்தவன்கதை யுமமவன்சென்னியு
நாந்தன்கொண் டறுத்தனனாணி.

(இ-ள்.) அப்படிவிழுந்துஇறந்துபோனவுடனேகுதிரைமுகஅசு ரியெதிரேவந்துதண்டாயுதத்தினாலேஅடித்தான் அடித்ததண்டாயுதத்தையும்அந்தஅசுரனுடையதலையையுமகத்தியினாலேஅறுத்துத்தன் னினதுர்க்கையும—எ-று. (௧௬)

அக்கதன்பி னழலுருவாயினன்
கவகையாயினன் காரிருளாயினன்
பங்கையாசனனுயினன பங்கய
மங்கைநாயக னுயினன்மாயையால்.

(இ-ள்.) அதன்பின்பு அசுரன்நெருப்புருபங்கொண்டுவந்தான் அதன்பின்புசலப்பிரளயருபங்கொண்டும் அந்தகாரமாகியும்தாமரைப் புஷ்பத்திலிருக்கிறபிர்ம்மாவாயும் இலட்சுமிபுருஷராகியவிஷ்ணுவாகியும் எதிர்த்தான்மாயையினாலே—எ-று. (௧௭)

ஈதுகண்டவ ளென்செய்வன்மாயையால்
லாதுசெயதன ளென்றுதளர்ந்துவம
பாதநெஞ்சினிற் பற்றினள்பற்றிய
போதிலோர்மொழி விண்ணிறபுகன்றதே.

(இ-ள்.) அப்படிஅசுரன பலபலருபங்கொண்டவுடனே பார்த்து மாயையினாலேதுன்பப்படுத்துகிறான்என்னவுபாயஞ் செய்தாலும்சாகிறதில்லைஇதற்கென்னசெய்வேனென்றுதுர்க்கையானவள் பார்வதிதேவியினுடையஇரண்டுபாதத்தையும்மனதிலேதியானித்தாள் அப்படிதியானித்தவுடனேஆகாயத்தினின்றும் அசரீரிஒருவாக்கியஞ் சொல்லியது—எ-று. (௧௮)

மாயவேடங்க ளன்றிமகிடமே
மாயபோதி லவன்றலைத்தள்ளியே
தூயதாளின் மிதிக்கற்றொலைந்திடும்
நீயமாயையெனச்சொலத் தேறினள்.

(இ-ள்.) அநேகவிதமான மாயவேஷங்களல்லாமல்சுபாவமான எருமைமுகருபங்கொண்டபோதுஅவன்தலையையறுத்துக்கீழேதள்ளி உனனுடையபரிசுத்தமாகிய காலினாலேமிதித்தால் தீமைபெருந்திய மாயைதொலைந்துபோமென்றுசொல்லத்துர்க்கையம்மன்தேறினாள்—எ-று

மட்டின்மாயை வடிவின்மலைந்துபின்
னெட்டிலைத்தலைச் சூலத்தினிக்கினாள்
துட்டன்மேதிய தாய்ப்படைதொட்டனன்
வெட்டிவீழ்தரி யடியின்மிதித்தனள்.

(இ-ள்.) அளவில்லாத மாயருபங்கொண்டுவா நெடுமைபொருந்திய அவனுடைய சூலத்தினாலேகுத்திக்கொன்றான் பின்பு அந்தத்து ஷ்டன் பழைய எருமைக்கடாமுகத்தை யுடையனாகிஆயுதங்களைப்பி

ரயோகஞ்செய்த அளவில் அதகளைவிலக்கி வாளாயுதத்தால் தலையை வெட்டித்தள்ளிக் காலினலேமிதித்துக்கொன்ருள் துர்க்காதேவி எ-று.

ஒப்பிலாபபத மூன்றுமிதித்திடில்
தபபிமாலைய தவிாப்பதுபாரமோ
வட்பதத்தை நினைக்கினுமாணவஞ்
செப்புகாமிய மாயையுந்தீக்குமே.

(இ-ள்.) துர்க்கையம்மன் பாதத்தைநினைத்தாலும் அதைநினைத்தவருடைய ஆணவமாயை காமியமென்கிற மும்மலங்களையும் நீக்கிவிடும் அப்படிப்பட்ட ஒப்பில்லாதபாதம் பரிசமாகும்படி ஊன்றி மிதித்தால் பொய்யாகிய மாயைமாத்திரந் தவிர்ப்பதுபெரிதோ—எ-று. (சக)

போதவாணவர் பூமழைபெயதனர்
மேதிமாமுகன் மெய்க்கதியுற்றனன்
நீதிலாவவன் செங்களந்தன்னிலோர்
சோதிலிங்கமிருந்ததுதோன்றவே.

(இ-ள்.) தேவர்கள்மிகவும் புஷ்பவருஷம்பொழிந்தார்கள்மஹிடாசுரனும் அம்மன்கையினலிறந்ததினலே மெய்யாமையாமோட்சத்தைச் சேர்ந்தான் யாதொருகுற்றமுமிலலாத அவனது சிவப்பாகிய கண்டத்திலே ஒருபடிகலிங்கமிருந்தது—எ-று. (சஉ)

கண்டமட்டிலக் காக்கொளக்கார்கவ
கண்டமட்டிற் புறந்தகடாமகன்
கண்டமட்டி லிருந்தகடவுளைத்
கண்டமட்டி லெடுத்தனள்கன்னியே

(இ-ள்) நவகண்டமட்டும் ஆண்டமஹிடாசுரனுடையகழுத்தைச்லெக்காகவைத்துத் துர்க்காதேவி அறுக்கஅந்தக்கழுத்தி லிருந்தபடிகலிங்கத்தை கண்டபோதே கையினலெடுத்தாள்—எ-று. (சங)

கொண்டுசென்றுமை கோகநகப்பதங்
கண்டுபோற்றிக ழ்கடவுளையியந்தனள்
வண்டுவார்குழல் வாஙகினள்செங்கையை
அண்டர்நாயகன் விண்டலனுகையால்.

(இ-ள்.) அப்படிப்பட்ட படிகலிங்கத்தையெடுத்துக்கொண்டுபோய் உமாதேவியினது பாதங்களைத்தொழுதுநடந்தகாரியமெல்லாம்சொலவி. த்சுவாமியைக்கொடுத்தாள வண்டுகளசூழ்ந்திருக்கின்ற கூந்தலையுடையபார்வதியம்மன் கையினலேவாங்கினள்தேவர்களுக்கெல்லாம்நாதராகவிருக்கின்றசுவாமியும் அம்மன்கைமேல் வைத்திருக்கிற ஆசையினலே கையைவிடாமற கெட்டியாகஇருந்தார்—எ-று. (சச)

தாயுமந்நது கண்டுமகிழ்ந்திறை
ஞயவென்காம பற்றியசதனெ
லாயையக்கை புதைந்துமகபதிக்
காயிரக்கண் ணளித்தவன்கூறுவான்.

(இ-ள்) பார்வதியாமவள் அந்த ஆச்சரியத்தைப்பார்த்து மகிழ்ச்சியடைந்துசுவாமிபானடர்தன் கையைவிடாமலிருந்தது எதனாலேயென்

மன்னதனுமவனையிவன்காத்தி லிங்கத்துடன்விழுங்கி மகிழ்ந்துபோனான், பின்னகனுலவன்மிடற்றிறசிவனுருவமிந்ததந்தப்பெருமையாலே, யுன்னதமாயினன்சிவனுமூறுததறித்தவுடனுமிறைபருவமென்றே, வன்னதனால்வினையடைந்தததுதவுருநவதீர்த்தமாடியென்றான்.

(இ-ள்) எதிர்ப்பட்ட அந்தமன்னதனென்கிறரிஷியைக் கையிலிருந்த இலிங்கத்தோடேஇந்தமகிடாசூரனெடுத்துவிழுங்கிவிட்டுப்போனான் பின்புஅவனகண்டத்திற்சிக்கிக்கொண்டு படிகலிங்கமிருந்தபடியினாலே யிருந்தபெருமையடைந்தான் அந்தஇலிங்கமிருந்தகண்டத்தையுடையவனும் சிவசொரூபமன்றோ அவனைகொன்றபடியினாலே பாவமசம்பவித்தது நவதீர்த்தங்களாடினால் அந்தபாவமபோகுமென்றார்கௌதமர்

அன்புமுனியுரைத்தளவிலொருமொழியங்காத்திலெழுந்தரியதீர்த்தமொனபதுமவ்விடத்நலவருமவை வருமாறியற்று மெனவுமையும்விந்தை, தன்பதும முகநோக்கி யுனதுகைவாளிநதுகங்கைதருவாயென்றான, வன்பணிலமெடுத்தானு தொழுதுகைவாளிலத்தெறிந்துவாங்கும்போதில்.

(இ-ள்) மிகவும்பத்தியையுடையகௌதமர்இந்தப்பிரகாரஞ்சொன்னஅளவில் பாவந்தீர ஆடுதற்கு ஒன்பதுதீர்த்தமும்இவ்விடத்தில் வருமபடிச்செயயென்று ஆகாயத்திலிருநது ஒருவார்த்தைபிறந்தது அதைககேட்டுபார்வதியும் தாமரையினதுமலர்போன்ற முகத்தைப் பார்த்து உன்னுடையகையிலிருக்கிறவாளினாலே பூமியைபிளந்துகங்கைவரும்படிசெயயென்று சொல்ல ஜயசக்கையிரண்டாரித்த துர்க்கையும்வணங்கிவாளாயுதத்தால்பூமியிலேவீசியெடுத்தபோது-எ-று. (௩ய)

நவநதியுமபிறவுளநனைதிகளுமசசொகந்தீர்நல்லதான
சுவையதிகழுதவுபலதடாகங்களுமவ கெழுந்தவந்தசசுனையினாடே
பவமகலவொருமாதமுழுகியிருந்தாள் காதைப்பற்றிநீவகாச் [ற்
சிவவடிவுமகன்றதுதன்னுளமகிழ்ந்து கரையில்வந்தாடேவர்போற்

(இ-ள்) ஒன்பதுதீர்த்தங்களும்மற்றுமுள்ளநதிகளும் விடாயாறும்படிஉதவிசெய்யும நலருசியைக்கொடுக்கின்ற அனேகம்தடாகம்உண்டானதுகள் அந்தநதிகளில் ஒருமாதவரைக்கும் அம்மன்குற்றம் நீங்கும்படி ஸ்நானஞ்செய்துக்கொண்டிருந்தாள கையைப்பற்றிக்கொண்டு விடாமலிருந்த லிங்கமுமநீங்கியது அப்போதுதேவர்களபோற்றும்படி மனதுசந்தோஷித்துஅம்மனக்கரையில்வந்துசேர்ந்தாள்-எ-று. (௩க)

அருவருவாமொருசிவனையதன்கரைமேறபுறத்திருத்தியருச்சித்தாணம் இருவினையுந்தவிர்ப்பானுக்கென்பாவந்தீர்த்தானென்றியற்பேரிட்டாள் திருமருவும்பெருஞ்சுனைக்கு மினியகட்கதீர்த்தமெனத்திரிப்பேரிட்டாள், குருமணியைப்பருணகிரிப்பெருமானைத்தொழக்கனகக்கோயில் சார்ந்தாள்.

(இ-ள்) அருவமாகியும்உருவமாகியும்விளங்குகின்றஐப்பற்றசிவனை அந்தநதிக்கரையிலேஎழுந்தருளச்செய்து அர்ச்சனைசெய்தாள்நம்முனை

